திரிபுரா ரஹஸ்யம் ஞானகண்டம்

# ஸ்ரீ வித்யா கீதை

## श्री विद्यागीता

ஆக்கியோன்

ப்ரஹ்மஸ்ரீ ந. ஸுப்ரமண்ய அய்யர்



ஸ்ரீ ஞானப்பிரகாசன்

திரிபுரா ரஹஸ்யம் ஞானகண்டம்

# ஸ்ரீ வித்யா கீதை

# श्री विद्यागीता



ஸ்ரீ குஹாநந்தமண்டலியின் ஸ்தாபகர்

பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. ஸுப்ரமண்ய அய்யர்

அவர்களாலியற்றப்பட்ட

தாத்பர்ய தீபிகை என்னும் தமிழ் விரிவுரையும்.



2015

ஸ்ரீ ஞானப்பிரகாசன்

"ந்யூடெக் ஸுப்ரஜா-A"

பிளாட் எண். 377, 6வது செக்டர், 30வது தெரு,

கே.கே. நகர், சென்னை - 600 078.

போன் : 24740001. செல் : 9445110199

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | திரிபுரா ரஹஸ்யம் ஞானகண்டம் ஸ்ரீ வித்யா கீதை |
| நூலாசிரியர் | : | நா. ஸுப்ரமணிய ஐயர் |
| நூலின் பொருள் | : | ஆத்மதத்வம் |
| முதல் பதிப்பு | : | 1949 |
| மறு அச்சு | : | 2015 |
| மொழி | : | தமிழ் |
| தாள் | : | 11.6 வெள்ளைத் தாள் (க்ரீம் ஓவ்) |
| எழுத்தளவு | : | 12 புள்ளி |
| நூலின் அளவு | : | கிரவுன் 1/8 |
| பக்கங்கள் | : | 96 |
| நூல் கட்டுமானம் | : | பேப்பர் பேக் |
| அச்சிட்டோர் | : | ஜெ.எம். பிராசஸ், சென்னை. |
| வெளியிட்டோர் | : | ஸ்ரீ ஞானப் பிரகாசன் |
| விலை | : | ரூ.44.00 |

---

**THRIPURA RAHASYAM GNANA KANDAM**
**SRI VIDHYA GEETHA**
**N. Subramania Iyer**
**Shree Gnanaprakashan, Publisher,**
**Plot No. 377, Nu Tech Supraja - A, 30th Street,**
**6th Sector, K.K. Nagar, Chennai - 600 078.**
**Phone : 044 - 24740001. Cell : 9445110199**

**Rs. 44.00**

# முகவுரை

இவ்வித்தியா கீதையனது திரிபுராரஹஸ்யம் ஞான காண்டத்திலுள்தாகும். திரிபுரா ரஹஸ்யம் ஓர் அத்புதமான இதிஹாஸமாகும். இந்த இதிஹாஸத்தை யியற்றியவர் ஸ்ரீ ஹாரிதாயனரென்னும் ஒரு மஹரிஷியாவர். இக்காரணத்தினால் திரிபுராரஹஸ்யத்திற்கு ஸ்ரீ ஹாரிதாயன ஸம்ஹிதையென்றும் மற்றொரு பெயருண்டு. இந்த ஹாரிதாயனருக்கும் ஸுமேதஸ் என்னும் நாமாந்தரமுண்டு. இந்த ஸுமேதஸ் ஸ்ரீபரசுராமருடைய சிஷ்யர். இவருக்குப் பரசுராமர், தனது குருநதராகிய ஸ்ரீ தத்தாத்திரேயரால் உபதேசிக்கப்பட்டதும், தனக்கும் குருவுக்கும் நடந்த ஸம்வாத ரூபமானதுமான இத்திரிபுராரஹஸ்யத்தை யுபதேசித்து ஓரிதிஹாஸக்கிரந்தமாக இயற்றும்படி ஆக்ஞாபித்தனர். குருவின் உத்தரவின்படி, ஸுமேதஸ் என்னும் ஹாரிதாயனர், புத்திக்கு அதிஷ்டாதரியாகிய மந்த்ரிணியென்னும் சியாமளா தேவியின் அம்சமாகிய ஸ்ரீ மீனாக்ஷிதேவியின் ராஜதானியாகும் ஹாலாஸ்ய க்ஷேத்திரத்தில் வஸித்துக்கொண்டு, சர்யாகண்டம் (42 அத்) மாஹாத்மியகண்டம் (80 அத்) ஞானகண்டம் (22 அத்) என்னும் மூன்று கண்டங்களையுடைய திரிபுரா ரஹஸ்யத்தை இயற்றி யருளினர். இந்நூல், தினமொன்றுக்கு நான்கு அத்தியாயங்கள் வீதம், தேவீமான அஷ்டாங்கரீதியாய் 36 தினங்கள் கொண்ட ஒருமாதத்தில், 144 அத்தியாயங்களை யுடையதாய் இயற்றப்பட்டுத் திரிகண்ட வடிவமாய் இலங்குகின்றது.

மாஹாத்மியக்கண்டத்தில், மஹாயோகியாகும் ஸம்வர்த்தருடைய பிரசம்ஸை இருக்கிறது. ஸம்வர்த்தருடைய ஆக்ஞையினால் தான், பரசுராமர் ஸ்ரீ தத்தபகவானைக் குருவாக அடைந்ததாகத் தெரிகின்றது. இங்ஙனம் ஸம்வர்த்த மஹாயோகியைப் பற்றிக் கூறும் திரிபுராரஹஸ்யமாகும் இதிஹாஸத்தை ஸ்ரீசங்கரபகவத்பாதாள், தாமியற்றிய பிரஹ்ம ஸூத்திர பாஷ்யம் IIIஅத். 4 பாதம், 37 ஸூ.

अपि च स्मर्यते என்னும் ஸுத்திரபாஷ்யத்தில், संवर्तप्रभृतीनां च नगनचर्यादियोगादनपेक्षिताश्रमकर्मणामपि महायोगित्वं स्मर्यत इतिहासे --- என்று திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றனர். இந்த இதிஹாஸம் திரிபுரா ரஹஸ்யமே யாகும். இதனால் திரிபுரா ரஹஸ்யத்தின் ப்ராமாண்யமும், மஹிமையும் விளங்குகின்றனவன்றோ?

மேலும் இந்த திரிபுராரஹஸ்யத்தின் மூன்றுகண்டங்களும் "ओं नमः" ஓம் நம: என்று உபக்ரமித்து "त्रिपुरैव ह्रीं" த்ரிபுரைவ ஹ்ரீம் என்று உபஸம்ஹாரம் செய்யப்பட்டுள்ளதனால் பிரகாச விமர்சப் பரணவங்களுடைக்கிடைய இவ்விதிஹாஸம் விளங்குவது கீவனிக்கத் தக்கது.

இதுகாறும் பொதுவாய் திரிபுராரஹஸ்யத்தைப் பற்றிக் கூறினோம். பிரக்ருதமாயுள்ள ஞானகண்டத்தைப்பற்றியும், அதில் அந்தர்க்கதமான ஸ்ரீவித்யா கீதையைப் பற்றியும் இங்கே கூறுவது அத்தியாவசியமாயினும், அவற்றைப் பற்றி, உபோத்காதத்தில் நன்கு கூறப்பட்டதனால் இங்கு மறுபடியும் கூறுதல் மிகையே யாகுமென விடுக்கப்பட்டது. வித்யாகீதை யெல்லாக்கீதைகளிலும் மிகச்சிறந்த தென்பது இதை வாசிப்போர்க்குச் சொல்லலாமலே விளங்கும்.

இக்கீதை அத்வைதானுபவத்தைக் கரதலாமலகமென வுணர்த்துகின்றது.

இக்கீதையை அந்தர்க்கதமாயக் கொண்டுள்ள ஞான கண்டத்திற்கு தாத்பரிய தீபிகை யென்னும் பெயருள்ள ஒரு வடமொழி வியாக்கியமானமுள்ளது. இவ்வியாக்கியானம் கலி 4932-ம் வருஷம், ஹாலாஸ்ய (மதுரை) நகரத்திற்குச் சமீபமாய், ஐந்து கிராமங்களில் ஒன்றாகிய மஹாபுஷ்கரம் (பெரியகுளம்) என்னும் கிராமத்தில், பிருஹச்சரண வம்சத்தைச் சார்ந்த ஸ்ரீவைத்தியநாத தீக்ஷிதரின் குமாரர், பிரஹ்மஸ்ரீ ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளவர்கள் இயற்றியதாகத் தாத்பர்ய தீபிகை வியாக்கியானத்தின் இறுதியில் வியாக்கியாதாவே கூறியிருக்கிறது

கவனிக்கத்தக்கது. இது பிராசீனமானதன்று; ஆதுனிகமே. ஆயினும், அத்வைத சாஸ்திர தாத்பரிய நுட்பங்களை நன்கு உணர்த்துகின்றது. இதை யநுஸரித்தே தமிழ் விருத்தியுரை எழுதப்பட்டள்ளது.



இக்கீதை தர்ப்பணப் பரதிபிம்ப பக்ஷத்தை நன்கு ஆதரிக்கின்றது. ஸ்ரீவித்யோபாஸகர்களுக்கு இது மிகவும் அவசியானது. ஆதலால் தான் இதைத் தமிழில் மொழி பெயர்த்துப் பிரசுரிக்கத்துணிந்தேன். எனது துணிவிற்கு இன்னருள்புரிந்து முட்டின்றி முடியுமாறு அநுகிரஹித்து அடியேனது நாதசரணங்கள் நன்கு விளங்கட்டும். இதில் எனது பிரமாதாதி தோஷங்களாலும், ஆராய்ச்சிக்குறைவினாலும் பல விஷயங்கள் விளக்கப்படாமல் இருக்கலாம். மொழிபெயர்ப்பிலும் பிழைகள் இருக்கலாம். அவைகளையெல்லாம் முற்றறிவுள்ள முதுஞானிகள் அடியேன் மாட்டுக்கருணை புரிந்து, க்ஷமித்து பிழைகளைத் தெரிவிக்க கோருகிறேன்.

இதைச் சிரமம் பாராது ஒப்பு நோக்கி பிழைகளைத் திருத்தி வெகு அழகாக அச்சிட்டுத்தந்த ஸ்ரீபாலமனோரமா அச்சுக்கூடத்தலைவர் பிரஹ்மஸ்ரீ சங்கரராம சாஸ்திரிகள், M.A., B.L., அவர்களுக்கு அடியேனது நன்றியுரித்தான தாகுக.

இதிசிவம்,

குஹநாந்த மண்டலி
பழவந்தாங்கல்
மதராஸ் 16.
21-2-1949.

இங்ஙனம்
ஸஜ்ஜனம் விதேயன்
ந. ஸுப்ரமண்ய அய்யர்.

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# த்ரிபுரா ரஹஸ்யம் ஞானகண்டம்

# ஸ்ரீ வித்யா கீதை

## ஆக்கியோன் - ப்ரம்ம ஸ்ரீ ந. ஸுப்ரமண்ய ஐயர்

### வாழ்க்கைக் குறிப்பு

அவதரித்த இடம் - தமிழ்நாடு, காஞ்சிபுரம் அருகில் செப்பிட்டான் குளம் என்ற குக்கிராமம். தந்தையார் ஸ்ரீநரசய்யா, தாய் ஸ்ரீமதி காமாக்ஷி அம்மாள், குடும்பப் பெயர் நடிமிண்டி - கௌண்டின்ய கோத்ரம். ந. ஸுப்ரமணிய ஐயர் பிறந்த ஆண்டு 14-11-1882 சித்ரபானு வருஷம் ஐப்பசி மாதம் சுக்ல சதுர்த்தி செவ்வாய் கிழமை மூல நக்ஷத்திரம் மாலை 6.08 மணி அளவில். தொழில் சென்னை மாநகராட்சி பள்ளி ஆசிரியர் 1905 ஜூன் 23 முதல்.

தீக்ஷை பெற்றது குரு ஸ்ரீகுஹாநந்தாதர் அவர்களிடம் 1911 ஸாதாரண வருஷம் தை அமாவாசை திங்கட்கிழமை காலை ச்ரவண நக்ஷத்திரம் - த்ரிவேணி சங்கமம் அலஹாபாத் தீக்ஷா நாமம் ஸ்ரீசிதாநந்த நாதர். ஸ்ரீ குஹாநந்த நாதர் அவர்களின் குருவின் பெயர் ஸ்ரீ ஆத்மாநந்த நாதர். இருவருடைய சமாதி கங்கைக் கரையில் உள்ளது. ஸ்ரீ ந.ஸுப்ரமண்ய ஐயர் அவர்கள் விதேஹ கைவல்யம் 1957 செப்டம்பர் 28ம் நாள் ஹேவிளம்பி சுக்ல சஷ்டி சனிக்கிழமை இரவு 7.00 மணி அளவில் (சரந் நவராத்ரி புண்யகாலம்) சென்னை மீனம்பாகத்தில் உள்ள பழவந்தாங்கல்)

---

இந்நூலை அச்சிட்டு வெளியிட அனுமதி அளித்த ஸ்ரீகுஹானந்த மண்டலி ஸ்ரீமதி உஷா நாராயணபாரதி அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

மன்மத வருஷம் சித்திரை 8ம் தேதி 21-4-2015 பௌம வாஸரம் - அக்ஷயத்திருதியையன்று மறுவெளியீடு செய்வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

உ

ஸ்ரீ பரதேவதாயை நம:

# ஸ்ரீ வித்யா கீதை

।। श्रीः ।।

।। ब्रह्मविदाप्नोति परम् ।।

## உபோத்காதம்

அவதாரிகை :- வித்யா கீதை யென்னும் இச்சிறந்த நூலானது ஸ்ரீதிரிபுரா ரஹஸ்யம், ஞான கண்டத்தில் உள்ளதாகும்.



திரிபுரா ரஹஸ்ய மென்பது ஜனனமான ஸம்ஸாரமாகும் ஸமுத்திரத்தில் ஆழ்ந்து வருந்தும் ஜீவர்களை உய்விக்கும் பொருட்டு ஸ்ரீஹாரிதயான ரென்னும் மஹர்ஷியால் வடமொழியில் அருளிச் செய்யப்பட்ட ஓர் இதிஹாஸமாகும்.

இந்த அத்புதஞான சாஸ்திரத்தை ஸ்ரீதத்தாத்திரேயர் பரசுராமருக்கு உபதேசித்தனர். இது, சர்யகண்டம், மாஹாத்மியகண்டம், ஞானகண்டம் என்னும் மூன்று பெரும் புரிவுகளையுடையது. இந்த வித்யா கீதை ஞானகண்டத்திலுள்ளதென்று முன் கூறப்பட்டது.

இது, ஸாக்ஷாத் வித்யாஸ்வரூபிணியாகும் ஸ்ரீதிரிபுரா மஹாதேவியே திருவாய் மலர்ந்தருளியுள்ள காரணத்தால் வித்யாகீதை யென்னும் பெயரைப் பெற்றுள்ளது.

இதில் பிரதிபாதிக்கப்படும் முக்கியமான விஷயங்களாவன :—

1. பிரஹ்மவித்யாஸ்வரூபிணியாகும் ஸ்ரீலலிதா மஹா திரிபுரஸுந்தரியின் பர, அபர ஸ்வரூபங்கள்.
2. ஸ்ரீ திரிபுர ஸுந்தரியின் ஐச்வர்யம்.
3. விமர்சவடிவ தத்துவஞானம்.
4. பிரகாச விமர்ச ஸாமரஸ்யஞானத்தின் பயன்.
5. ஷை ஸாமரஸ்ய ஞானஸாதனம்.
6. ஸாதகனுகும் தீவிரதர முமுக்ஷுவின் லக்ஷணம்.
7. ஞானஸித்தியின் ஸ்வரூபம்.
8. ஷை ஸித்தியின் பராகாஷ்டை (முடிவு).
9. ஜீவன் முக்த ஸித்தரின் தாரதம்மியம்.
10. உத்தம ஸித்தரின் லக்ஷணம்.

மேற் கூறிய விஷயங்களைப் பற்றித் தெளிவாய்த் தெரிந்து கொள்ள மிக்க ஆவலுடன் இருந்த ரிஷிகணங்களுக்குப் பரதேவதையே திருவாய் மலர்ந்தருளினாள்.

இந்த கீதை 138 அநுஷ்டுப் சுலோகங்கள் கொண்டதாகும். இதற்கு வடமொழியிலேயே சுருக்கமாக ஒரு வியாக்கியானம் இயற்றப்பட்டு அச்சிலும் விளங்குகின்றது.

இதில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் அத்வைத சாஸ்திரப் பயிற்சியில் முயலும் தீவிரதர முமுக்ஷுக்களுக்கு இன்றியமையாதனவாயிருத்தலினாலும், வடமொழிப்

பயிற்சி யற்றவர்களுக்குத் தமிழ்மொழி பெயர்ப்பு உப யோகமாயிருக்கு மாதலினாலும் இவ்வித்யா கீதையின் மூல சுலோகங்களுக்குள்ள வியாக்கியானத்தைத் தழுவி தமிழுரை கூறப்படுகின்றது.

---

## மங்கலம்.

जयत्येषा परा श्रीमत्त्रिपुरा सर्वसाक्षिणी ।
या सेवकानुद्धरति संसृतेर्गुरुरूपिणी ॥

(இதன் பொருள்) ஸர்வஸாக்ஷிணியாயும், ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்னும் மூன்று அவஸ்தைகளி லும் விளங்கும் ஞானஸ்வரூபிணியாயும், அஞ்ஞான இருளை ஒழித்து ஞானப்பிரகாசத்தை யருள்பவளாயும், தன்னை உபாஸிக்கும் ஸாதகர்களை ஸம்ஸாரக்கடலினின் றும் கரை சேர்ப்பிப்பவளாயுமுள்ள யாதொரு பராசக்தி யுண்டோ, அவள் ஸர்வோத்கிருஷ்டமாய் விளங்கட்டும்.

श्रीगुरुचरणद्वन्द्वं नत्वा स्मृत्वा परां चितिं त्रिपुराम् ।
सर्वान्तरात्मरूपां विद्यागीतां स्फुटां च विवृणोमि ॥

(இ-ள்) ஸ்ரீ குருபாதுகைகளுக்கு நமஸ்காரம் செய்து சராசரப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டான ஆத்மஸ்வரூப மாயுள்ள பரப்பிரஹ்மவித்யாஸ்வரூப ஸ்ரீமஹாத்திரிபுர ஸுந்தரீ தேவியைத் தியானித்து ஸ்ரீவித்தியா கீதையின் தெளிவான விவரணம் தமிழ் மொழியில் இயற்றுகின் றேன்.

## நூல்

அவதாரிகை: —ஸ்ரீ தத்தாத்திரேயர் ஸ்ரீபரசுராமருக்குத் திரிபுரா ரஹஸ்யம், ஞானகண்டத்தை உபதேசிக்கத் தொடங்கி முதல் பத்தொன்பது அத்தியாயங்களில், ஸத்ஸங்க மாஹாத்மியத்தை விளக்கும் பொருட்டு ஹேமசூடோபாக்கியானத்தையும், ஜகத்தின் ஸத்தையை விளக்கும் பொருட்டு சைலலோக ஆக்கியானத்தையும் விக்ஞானக் கிரமத்தையும், ஞானிகளது நிலைமையையும் விளக்கும் பொருட்டு ஜனக அஷ்டாவக்ரீய ஸம்வாதத்தையும் நன்கு உபதேசித்தனர். பின்னர் ஸனகாதி ரிஷிகளுக்கு ஸாக்ஷாத் வித்தியா தேவியே பிரத்தியக்ஷமாகி திருவாய் மலர்ந்தருளிய இந்த கீதையை உபதேசித்தனர்.

## ॥ विद्यागीता ॥

**अत्र ते वर्तयिष्यामि पुरावृत्तं शृणुष्व तत् ।**
**पुरा ब्रह्मसभामध्ये सत्यलोकेऽतिपावने ॥ १ ॥**
**ज्ञानप्रसंगः समभूत्सूक्ष्मात्सूक्ष्मविमर्शनः ।**

(இதன் பொருள்) ஓ பரசுராமரே! ஞானிகளின் ஸ்திதி எத்தகையதென்று நீ கேட்டாயல்லவா? அவ் வினாவிற்கு விடையாக முன்னொரு காலத்தில் நடந்த விருத்தாந்தத்தை உனக்குக் கூறுகின்றேன்.

பூர்வத்தில் மிகத் தூய்மையான ஸத்தியலோகத்தில் பிரஹ்மதேவாது மஹா ஸபையில் மிகவும் நுட்பமான ஞானவிசாரம் நடந்தது.

सनकाद्या वसिष्ठश्च पुलस्त्यः पुलहः क्रतुः ॥ २ ॥
भृगुरत्रिरङ्गिराश्च प्रचेता नारदस्तथा ।
च्यवनो वामदेवश्च विश्वामित्रोऽथ गौतमः ॥ ३ ॥
शुकः पराशरो व्यासः कण्वः काश्यप एव च ।
दक्षः सुमन्तुः शङ्खश्च लिखितो देवलोऽपि च ॥ ४ ॥
एवमन्ये ऋषिगणा राजर्षिप्रवरा अपि ।
सर्वे समुदितास्तत्र ब्रह्मसत्रे महत्तरे ॥ ५ ॥
मीमांसांचक्रुरत्युच्चैः सूक्ष्मात्सूक्ष्मनिरूपणैः ।

(இ – ள்) அச்சபையில், ஸநகாதியர் நால்வரும், வஸிஷ்டர், புலஸ்தியர், புலஹர், க்ரது, ப்ருகு, அத்திரி, அங்கிரஸ், பிரசேதஸ், நாரதர், சியவனர், வாமதேவர், விஶ்வாமித்திரர், கௌதமர், சுகர், பராசரர், வியாஸர், கண்வர், காசியபர், தக்ஷர், ஸுமந்து, சங்கர், லிகிதர், தேவலர் முதலிய ரிஷிகணங்களும் இவர்களைப் போன்ற மற்ற ராஜரிஷிகளும் ஸாதுக்களும் நிரம்பி யிருந்தனர். இவர்கள் யாவரும் பிரஹ்மஸத்ரம் என்று கூறப்படும் ஞான யாகத்திற்கு வந்தவர்களாவர். ஞானயாகத்தில் பல ஆத்ம ஞானிகள் தங்கள் தங்கள் அநுபவத்தைக் கொண்டு மிகவும் நுட்பமான அகண்டாத்வைத ஞானவிசாரம் செய்தனர்.

ब्रह्माणं तत्र पप्रच्छुः ऋषयः सर्व एव ते ॥ ६ ॥
भगवन् ज्ञानिनो लोके वयं ज्ञातपरावराः ।
तेषां नो विविधा भाति स्थितिः प्रकृतिभेदतः ॥ ७ ॥

केचित्सदा समाधिस्थाः केचिन्मीमांसने रताः ।
अपरे भक्तिनिर्मग्नाश्चान्ये कर्मसमाश्रयाः ॥ ८ ॥
व्यवहारपरास्त्वेके बहिर्मुखनरा इव ।
तेषु श्रेयान्हि कतम एतन्नो वक्तुमर्हसि ॥ ९ ॥
स्वस्वपक्षं वयं विद्मः श्रेयांसमिति वै विधे ।

(இ–ள்) இங்ஙனம் நிகழுங்காலையில் ரிஷிகள் எல்லோரும் ஒருங்கேகூடி நான்முகப் பிரஹ்மதேவரைப் பார்த்து, "பகவானே! உலகத்தின் கண் விளங்கும் ஞானிகளில் நாங்கள் பராவரமுணர்ந்தவரா யிருக்கிறோம். இத்தகைய எங்களுடைய நிலையானது பிரக்ருதி பேதத்தினுல் பலவாருக வேறுபட்டு விளங்குகின்றது. சிலர் ஸதா ஸமாதியிலேயே இருக்கின்றனர்; சிலர் ஸதா ஆத்ம விமர்சனத்தில் பிரியமுள்ளவராய்க் காணப்படுகின்றனர்; வேறு சிலர் பக்தியினுல் பரவசப்பட்டு உருகுகின்றனர்; மற்றும் சிலரோவெனின் கர்மாக்களைச் சிரத்தையுடன் அநுஷ்டிப்பவராய் இருக்கின்றனர்; இன்னும் சிலர் பாஹ்ய திருஷ்டியுடைய பாமரரைப் போன்று வியவகரிக்கின்றனர். இங்ஙனம் பலவகைப்பட்ட நிலைகளிலுள்ள எங்களில் யார் சிரேஷ்டர்? யார் தாழ்ந்தவர்? என்பதை யெங்களுக்குக் கூறியருளல் வேண்டும். எங்களில் ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் நிலையையே உயர்ந்ததாகக் கருதுகின்றோம்."

(விசேஷ வுரை) பிரக்ருதி பேதத்தினுல் = ப்ராக்ருத ஸம்ஸ்கார விசேஷத்தினுல். அதாவது பிரபஞ்ச வாசனையினுல் என்பதாகும். வாஸனு க்ஷயம் பெற்றவரன்றோ

ஆத்மஞானிகள்? ஆத்மஞானிகளுக்குப் பிரக்ருதி பேதத்தினுல் ஏற்படும் ஸ்திதியின் பேதம் அவர்களது ஸ்தூல சரீரத்தைப் பற்றியுள்ள பிராரப்தத்தினுல் ஏற்பட்டதேயாகும். அந்த பிரஹ்ம ஸபையில் கூடியிருந்த ரிஷிகளில் ஸநகாதிகள், வஸிஷ்டர், சுகர், வாமதேவர், வியாஸர் முதலியவர்கள் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை யடைந்த ஜீவன் முக்தர்கள் என்பது உபநிஷத் பிரஸித்தமாகும். நாரதர் முதலியவர்கள் பக்தியிலீடுபட்டவர்களாவர்; கௌதமர், பராசரர், சங்கர் முதலியவர்கள் தர்மசாஸ்திரஸ்ம்ருதி கர்த்தாக்கள்; ஆதலின் கர்மகாண்டத்தில் சிரத்தையுடையவர்களாவர். காச்யபர், விச்வாமித்ரர் முதலியவர்கள் சில சமயங்களில் தபஸ்ஸையும், சில சமயங்களில் பாஹ்ய திருஷ்டியுடைய பாமர வியவஹாரங்களிலும் ஈடுபட்டுள்ளவராவர்.

இங்ஙனம் பலவகையான வியவஹார பேதங்கள் ஏற்பட்டுள்ளதன்காரணம் அவர்களின் பிராரப்தமேயாகும். ஞானிகளின் பிராரப்தசேஷம் அவர்களின் சரீரமேயாகும். பலவேறுபாடுடைய பிராரப்தத்தினுல் ஜீவன்முக்தர் ஸதா தவத்தையே புரிந்துகொண்டிருப்பர். வர்த்தகம் செயினும் செய்வர்; ராஜ்யபரிபாலனமும் செய்வர், அல்லது பிச்சை யெடுத்துண்பினுமுண்பர். இங்ஙனம் ஏற்பட்டுள்ள வியவகார பேதத்தினுல் அவர்களின் ஞானத்தில் பேதமும் அதன் பயனுன மோக்ஷ பேதமும் சம்பவிப்பதில்லை யென்பது சாஸ்திர சித்தாந்தமாம்.

ஜீவன்முக்தர்களின் பிராரப்தம் ஐவகைப்படும். அவை உத்தமம், மத்திமம், கனிஷ்டம், அதமம், அதமாதமம் என்பனவாம்.

1. உத்தமம்: விதேஹ கைவல்யம் வரையில் அதாவது சரீரம் நீங்கும் வரை நிவ்ருத்திக்கே ஹேதுவான பிராரப்தம். இது ஸநகாதிகள், சுகர், வாமதேவர் முதலியவர்கட்குள்ளதாகும்.

2. மத்தியமம்: முன்னர் பிரவ்ருத்திக்கும், பின்னர் நிவ்ருத்திக்கும் ஹேதுவாயுள்ளது. இது யாக்ஞவல்கியருக்கிருந்தது. இவர் முதலில் கிருஹஸ்தாசிரமத்தில் ஒழுகி, வாத ஸபைகளில் வெற்றிபெற்று, பொருளைச் சேகரித்துப் பின்னர் நிவ்ருத்தி தர்மத்தை யாச்ரயித்து வித்வத் ஸன்னியாஸம் பூண்டனர். இவரது பிராரப்தம் மத்தியம பிராரப்தமாம்.

3. கநிஷ்டம்: எப்போதும் பிரவ்ருத்திக்கே ஹேதுவானது, இது ஜனகராஜன் முதலியோரது பிராரப்தம் போல்வதாகும். இதையே அதமப் பிராரப்தமென்றுங் கூறுவர்.

4. அதமம்:—இது முன்னர் நிவ்ருத்திக்கும் பின்னர் பிரவ்ருத்திக்கும் ஹேதுவானது. வாசிஷ்டத்தில் கூறப்படும் சிகித்வஜன் முதலியோர்களது பிராரப்தம் போல்வதாம்.

5. ஸ்வேச்சாசாரப்பிரமாதத்திற்கு ஹேதுவாயிருப்பது அதமதமப் பிராரப்தமாம். இது விசுவாமித்திரர் முதலியவர்களின் பிராரப்தம் போல்வதாகும்.

"நறவங்குடித்தாலும் நாயிறைச்சி தின்றாலும்
குறவருடன் கூடிக் குளித்தாலும்—இறைவனே
தானென்னும் தன்மை சலியார் உலகிற்கு
நானென்று சொல்லி நடிப்பார்," என்னும்

பிரமாணத்தால் ஆத்மஞானியின் பாஹ்ய வியவகாரத்தால் அவர்களின் ஸ்வரூபத்தில் தினையளவும் நழுவுவதில்லை யென்பது பரமசித்தாந்தமாகும். वयं ज्ञातपरावरा: = நாங்கள் பராவரக்ஞானிகள் என்று ரிஷிகள் தங்களைக் கூறிக் கொண்டனர். பராவரம் என்பது ஸர்வோத்கிருஷ்ட மான பிரஹ்மமாகும்.

"தஸ்மின் த்ருஷ்டே பராவரே" என்பது உபநிஷத் வாக்கியம். பராக்ஞானிகட்கு ஸந்தேஹங்கள் யாவும் நசித்துவிடும்; ஹ்ருதயக்கிரந்தியென்னும் அக்ஞானம் ஒழியும், எல்லாக் கர்மாக்களும் க்ஷீணித்துவிடும்.

इति पृष्टोऽवदद्ब्रह्मा मत्वानाश्वस्तमानसान् ॥ १० ॥
मुनीन्द्रा नाहमप्येतद्वेद्मि सर्वात्मना ततः ।
जानीयादिममर्थं तु सर्वज्ञः परमेश्वरः ॥ ११ ॥
तत्र यामोऽथ संप्रष्टुमित्युक्त्वा तत्र तैर्ययौ ।
संगम्य देवदेवेशं विष्णुनाऽभिसमागतम् ॥ १२ ॥
पप्रच्छ ऋषिमुख्यानां प्रश्नं तं लोकसृड्विधिः ।

(இ-ள்) இங்ஙனம் கூறிய ரிஷிகளின் வார்த்தைகளைக் கேட்ட பிரஹ்மதேவன் "இவர்கள் தங்கள் தங்கள் கொள்கையே சிலாக்கியமென நினைப்பதால், நான் ஏதாகி லும் இவர்களுக்குச் சொன்னால் அவ்வார்த்தைகளில் இவர்களுக்கு விச்வாஸம் கிஞ்சித்தும் ஏற்படாது;" என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு "ஹே ரிஷி களே! நானும் இவ்விஷயத்தை நன்கு அறியேன். அதாவது ஸந்தேஹத்தோடு தானிருக்கிறேன். கைலாஸபதியாகும்

ஸர்வக்ஞ பரமேச்வரன் ஒருவனே நீங்கள் கேட்ட வினக் களுக்கு ஸந்தேஹமில்லாமல் விடையளிக்கக் கூடியவர். ஆதலின் நாமெல்லோரும் அவரிடம் செல்வோம் வாருங் கள்" என்று கூறினர். அங்ஙனமே எல்லாரிஷிகளும் நான்முகப் பிரமனும் மஹாவிஷ்ணுவையும் அழைத்துக் கொண்டு கைலாஸம் சென்றனர். ரிஷிசிரேஷ்டர்களு டைய வினக்களை மஹாதேவனிடத்தில் பிரஹ்மதேவன் விண்ணப்பித்தனன்.

(வி-ரை) यः सर्वज्ञः सर्ववित्! பரமேச்வரனே ஸர்வக் ஞன்-எல்லாவித்தைகளுக்கும் ஈசானன் அதிபதியல்லவா? பரமேச்வரனுக்கு அக்ஞானத்தின் ஆவரணம் இல்லை ஆத லின் அவனுக்குச் சந்தேஹமும் இல்லை. ரிஷிகளின் வின வில் முக்கியமானது வெவ்வேறு நிலையில் அதாவது விய வகாரத்திலுள்ள ஞானிகளில் யார் சிரேஷ்டர் என்பதே யாகும்.

प्रश्नं निशम्य च शिवो ज्ञात्वा विधिमनोगतम् ॥ १३॥
मत्वाऽनाश्वस्तमनसो ऋषीन्देवो व्यचिन्तयत् ।
किंचिदुक्तं मयात्रापि व्यर्थमेव भवेन्ननु ॥ १४ ॥
स्वपक्षत्वेन जानीयु ऋषयोऽश्रद्धया युताः ।
इति मत्वा प्रत्युवाच देवदेवो महेश्वरः ॥ १५ ॥

(இ-ள்) பரமேச்வரனும் பிரஹ்மதேவனுடைய விண்ணப்பத்தைச் செவியில் வாங்கிக்கொண்டு, ஸர்வக்ஞ ஞதலின் பிரஹ்மதேவனது உட்கருத்தையும் நன்குணர் ந்து, ரிஷிகளுக்குத் தங்கள் தங்கள் கொள்கையில் அபி

மானமிருப்பதால் தனது வாக்கியத்திலும் சிரத்தை, நம்பிக்கை முதலியன ஏற்படாதெனத் தீர்மானித்து "நான் இவ்விஷயத்தில் ஏதாகிலும் சிறிது கூறுவேனேயாகில் அதனையும் இவர்கள் என் பக்ஷமென நினைத்துக் கொள்வார்கள் ஆதலின் அது வியர்த்தமே யாகும்" என்று நினைத்து அவர்களை நோக்கிக் கூறுவாராயினர்.

(வி-ரை) கைலாஸபதி ஸகுணேச்வரன். ஸம்ஹார கர்த்தாவாகும் ருத்திரனும், திரோபாவ கர்த்தாவாகும் மஹேச்வரனும், அநுக்கிரஹ கர்த்தாவாகும் ஸதாசிவனும் ஸகுண ஈச்வரஸ்வரூபத்தில் அடங்கியவர். உபாதியோடு கூடிய இவரது வார்த்தையில் ரிஷிகளுக்கு நம்பிக்கை ஏற்படாதென்பது நியாயமேயாகும்.

शृणुध्वं मुनयो नाहमप्येतद्वेद्मि सुस्फुटम् ।
अतो विद्यां भगवतीं ध्यायामः परमेश्वरीम् ॥ १६ ॥
तत्प्रसादान्निगूढार्थमपि विद्मस्ततः परम् ।

(இ-ள்) ஹே முனிகளே! கேளுங்கள். நானும் இவ்விஷயத்தை நன்கு உணர்ந்தவனல்லேன்.

ஆதலின் அறிவே ஸ்வரூபமாயுடைய பகவதியைத் தியானிப்போமாக; அவளுடைய பிரஸாதத்தினால் கூடமான ரஹஸ்யார்த்தங்களும் நன்கு விளங்கும்.

(வி-ரை) இவ்விஷயம் ஸனகாதியர்க்கும் தெரியாததாகையால் இவ்வித்யா கீதையிலுள்ள அர்த்தம் மிகவும் ரஹஸ்யமும் உத்தமமானதுவு மாகுமென்பது பெறப்படு

கின்றது. ரிஷிகளுக்கும், பிரம்மா முதலியவர்களுக்கும் குணோபாதியுள்ள தன்மையால் அவர்கள் பரிச்சின்னரே யாவர். பரிச்சின்னமுள்ளவரை அக்ஞானம் அகலா தன்றோ? சுத்த சித்சக்தியான பரதேவதையைத் தியானம் செய்தால் அசிரத்தை பகன்று நம்பிக்கை ஏற்படுமென்று கருதியே பரமேச்வரன் இங்ஙனம் கூறினார்.

इत्युक्ता मुनयः सर्वे विधिविष्णुशिवैः सह ॥ १७ ॥
दध्युर्विद्यां महेशानीं त्रिपुरां चिच्छरीरिणीम् ।

(இ–ள்) பரமேச்வரன் இங்ஙனம் கூறியவுடனே யாவரும் அதாவது ரிஷிகள், பிரஹ்மா, விஷ்ணு, சிவன் முதலியவர்கள் திரிபுரையும், மஹேசியும், ஞானமே சரீரமாகவுடையவளுமாகிய ஸ்ரீ வித்தியா ஸ்வரூபிணியைத் தியானம் செய்தனர்.

(வி–ரை) திரிபுரை = ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தியாகிய மூன்று அவஸ்தைகளிலும் ஸாக்ஷியாய் விளங்கும் ஞானஸ்வரூபிணி—துரீயரூபிணி.

சித் சரீரிணீ = ஞானமே சரீரமாகவுடையவள். அதாவது ஜடவுபாதியற்றவளென்பது கருத்து.

வித்யை = அவித்தைக்கு விரோதி. பிரஹ்மா, விஷ்ணு, சிவன் இவர்கள் திரிமூர்த்திகள். இவர்கள் முறையே சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார கர்த்தாக்கள்; தங்கள் தங்கள் கிருத்தியங்களில் கர்த்ருத்வத்தை வஹித்தவர்.

एवं सर्वैरभिध्याता त्रिपुरा चिच्छरीरिणी ॥ १८ ॥
आविरासीच्चिदाकाशमयी शब्दमयी परा ।
अभवन्मेघगम्भीरनिःस्वनो गगनाङ्गणे ॥ १९ ॥
वदन्त्वृषिगणाः किं वो ध्याता तदद्भुतमीहितम् ।
मत्पराणां हि केषांचिन्न हीयेताभिवाञ्छितम् ॥ २० ॥

(இ-ள்) இங்ஙனம் தியானம் செய்யப்பட்ட சித்சக்தியானவள் சிதாகாசஸ்வரூபிணியாய் விண்ணில் சப்தவடிவினளாய் ஆவிர்ப்பவித்து "ஓ ரிஷிகளே! நான் உங்களால் எதற்காகத் தியானிக்கப்பட்டேன்? உங்கள் கோரிக்கையைத் தாமதமின்றிக் கூறுங்கள்; எனது பக்தர்களின் அபீஷ்ட ஸித்தியில் கொஞ்சங்கூடத் தாமதம் உண்டாகக்கூடாது." என்று கூறினள்.

(வி-ரை) சிதாகாசமயீ=அபரிச்சின்ன ஞானஸ்வரூபிணி. ஆதலின் பரை = திரிசியமாகும் ஜடத்துவதோஷம் கிஞ்சித்து மில்லாதவள்.

இத்தகைய பரதேவதை எங்ஙனம் ஆவிர்ப்பவிக்கக் கூடும்? எனின், சப்தரூபமாய் ஆவிர்ப்பவிக்கலாம். பரமபிரேமைக்குவிஷயமான ஆநந்தமே பரதேவதை; ஆதலின் யாவராலும் விரும்பிப் போற்றத் தக்கவள்.

इति श्रुत्वा परां वाणीं प्रणेमुर्मुनिपुङ्गवाः ।
ब्रह्मादयोऽपि तदनु तुष्टुवुर्विविधैः स्तवैः ॥ २१ ॥
अथ प्रोचू ऋषिगणा विद्यां तां त्रिपुरेश्वरीम् ।
नमस्तुभ्यं महेशानि श्रीविद्ये त्रिपुरेश्वरि ॥ २२ ॥

अशेषोत्पादयित्री त्वं स्थापयित्री निजात्मनि ।
विलापयित्री सर्वस्य परमेश्वरि ते नमः ॥ २३ ॥
अनूतना सर्वदासि यतो नास्ति जनिस्तव ।
नवात्मिका सदा त्वं वै यतो नास्ति जरा तव ॥ २४ ॥
सर्वासि सर्वसारासि सर्वज्ञा सर्वहर्षिणी ।
असर्वाऽसर्वगाऽसाराऽसर्वज्ञाऽसर्वहर्षिणी ॥ २२ ॥
देवि भूयो नमस्तुभ्यं पुरस्तात्पृष्ठतोऽपि च ।
अधस्तादूर्ध्वतः पार्श्वे सर्वतस्ते नमो नमः ॥ २३ ॥

(இ-ள்) இங்ஙனம் சப்தரூபிணியாய் ஆகாசத்தில் ஆவிர்ப்பவித்த பரையின் மொழிகளைக்கேட்ட ரிஷிகள், பிரஹ்மா விஷ்ணு முதலிய திரிமூர்த்திகள் யாவரும் பர தேவதையைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துப் பற்பல விதமாக ஸ்தோத்திரம் செய்தனர். அதன் ஸ்வரூபம் யாதெனில்,

ஹே மஹேசானீ! ஸ்ரீவித்தையே!! திரிபுரையே!!! உனக்கு நமஸ்காரம்.

தன்னிடத்தினின்றும் இந்த ஜகத்தை யெல்லாம் சிருஷ்டித்து, தன் ஸத்தையிலேயே நிலைபெறச்செய்து, தன்னிலேயே லயிக்கச்செய்யும் பரமேச்வரியே உனக்கு நமஸ்காரம்.

ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும் ஹே தேவியே! உனக்குப் பிறப்பு முதலிய ஷட்பாவவிகாரங்கள் இல்லை யாதலின் எப்பொழுதும் புராதனை (பழையவள்) யாகவே இருக்கிறாய்; உனக்கு ஜரை (நரை, திரை) யின்மையால் எப்பொழுதும் புதியவளாகவே இருக்கின்றனை.

நானுவாய்த் தோன்றும் யாவும் நீயாகவே யிருக்கிருய்; தோன்றும் யாவற்றிலும் ஸாரஸ்வரூபிணி நீயே; முற்றுமுணர்ந்தவள் நீ; நீயே ஆநந்தஸ்வரூபி;

இங்ஙனமாயினும் நீ எவையுமன்று; ஸாரமுமன்று; ஸர்வக்ஞையுமன்று; ஸர்வஹர்ஷிணியுமன்று;

ஹே தேவியே! உனக்கு அடிக்கடி நமஸ்காரம்; முன்னும்பின்னும், மேலும் கீழும், பாரிசங்களிலும், எங்கும் நமஸ்காரம்.

(வி—ரை) மஹேசானி=அபீஷ்ட வரமளிப்பதில் ஸ்வதந்திரை. இந்தஸ்வாதந்த்ரியம் நிரபேக்ஷிகமானது.

ஸ்ரீவித்தையே! ஸ்ரீ = ஸ்வயம்பிரகாசம்; வித்தை= ஞானம்; ஆதலின் அவச்சின்னமற்ற சித்ரூபிணியே பரதேவதை. ஸ்ரீவித்தையே திரிபுரையாகும் துரிய ஸ்வரூபிணி; அஞ்ஞான ஸம்பந்தம் லேசமுமின்றிய அத்வய ஞானஸ்வரூபிணி என்பது கருத்து. ஈச்வரி=அந்தமற்ற (அளவுக்கடங்காத) ஸ்வாதந்த்ரிய சக்தியையே ஸ்வரூபமாகவுடையவள்.

चितिः स्वतन्त्रा विश्वसिद्धिहेतुः=பிரபஞ்சத்தின் ஸித்திக்கு ஸ்வதந்திரையான சித்சக்தியே காரணம்—என்று பிரத்தியபிக்ஞா ஸூத்திரம் கூறுகின்றது.

अशेषोत्पादयित्री=கண்ணுடியைப் போன்ற தனது ஞானஸ்வரூபத்தில் பிரதிபிம்பங்கள் போன்ற இந்த ஸர்வஜகத்தையும் தரிப்பவள்.

स्वेच्छया स्वभित्तौ विश्वमुन्मीलयति = தனது இச்சையால், தானுகிய சுவற்றில் பிரபஞ்சத்தை விரிக்கின்றனள்; பிரத்யபிக்ஞாஸூத்திரம் (2). சுவற்றில் தீட்டிய சித்திரங்கள்

எங்ஙனம் சுவறின்றி வேருய் இல்லேயோ, கண்ணுடியில் தோன்றும் பிரதிபிம்பம் எங்ஙனம் கண்ணுடியின்றி வேரு கவில்லேயோ, அங்ஙனமே, சித்ஸ்வரூபிணியாகும் ஸ்ரீவித்தியாஸ்வரூபத்தில் தோன்றும் பிரபஞ்சம் ஞானத்தைவிட வேறன்று. ஜலத்தினின்றும் தோன்றி, அதிலேயே நிலே பெற்று, அதிலேயே லயிக்கும் குமிழிகளேப்போல, இந்தப் பிரபஞ்சமும் ஞானத்தில் தோன்றி அதிலேயே நிலே பெற்று அதிலேயே லயத்தை யடைகின்றது. பிரபஞ்சத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயங்களுக்குப் பராதேவதை ஆச்ரயமாயும், அதிஷ்டானமாயும் இருப்பினும் அவளுக்கு உத்பத்தி நாசங்கள் இல்லே. இதனுல் உபலக்ஷணமாக எல்லாவித விகாரங்களின் அபாவம் ஸூசிப்பிக்கப் படுகின்றது. நிர்விகாரியாதலின்.

ஸர்வமும் சித்சக்தியே = பிரதிபிம்பங்களின் ஆத்மஸ்வரூபமாய்க் கண்ணுடி யெங்ஙனம் விளங்குகின்றதோ அங்ஙனமே ஜகத்தின் ஸத்தாஸ்வரூபமாய்ச் சித்தே விளங்குவதால் யாவும் சித்தே. இங்ஙனமாயின், அத்வயமாயும் நிர்விகாரியாயுமுள்ள சித்து நாஞவாயும் விகாரியாயுமுள்ள உலகரூபமாய் உள்ளதென்று எங்ஙனம் கூறலாம்? எனின், அந்த சித்து ஸர்வஸாரமாகும். ஸாரம் ஞானம், அதில் தோன்றும் நாமரூபங்கள் தோற்றல் மாத்திரமானவை.

கடத்தின் ஸாரம் களிமண்; ஜகத்தின் ஸாரம் ஸத்தாஸ்பூர்த்திவடிவ அகண்ட ஞானம்; சித் பிரகாச வடிவமாய் மித்தியாப் பிரபஞ்சத்தை எப்பொழுதும் விளக்குவதால் ஸர்வக்ஞை. இந்த சித்பிரகாசம் ஸ்வதந்திரமானது. ஸ்வதந்திரமே ஆநந்தஸ்வரூபமாகும். ஆதலால்

பரதேவதை ஸர்வஹர்ஷிணி. ஸ்வாதந்த்ரிய மின்மையால் ஆநந்தத்திற்குக் குறைவு ஏற்படுவது லோகப் பிரஸித்தமே.

ஸர்வம், ஸர்வக்ஞத்துவம், ஸர்வஸாரத்துவம், ஸர்வஹர்ஷத்துவம் முதலியவற்றிலுள்ள ஸர்வ பதம் அத்தியாஸ வடிவமேயாகும். அத்தியாஸம் நீங்கிய ஸ்வபாவரூப சித்திற்கு யாவுமாயிருத்தல், எல்லாம் அறிதல், எல்லாவற்றின் ஸாரமாயிருக்குந் தன்மை, எல்லாவற்றின் இன்பமாயிருத்தல் முதலியவை ஸித்திப்பதில்லை. ஆதலால் சித்து அஸர்வா, அஸர்வகா, அஸர்வஸாரா, அஸர்வக்ஞா, அஸர்வஹர்ஷிணியாயிருக்கின்றது.

ஸர்வா, ஸர்வகா, ஸர்வஸாரா என்பவை ஸத்ஸ்வரூபத்தையும், ஸர்வக்ஞா என்பது சித்ஸ்வரூபத்தையும், ஸர்வஹர்ஷிணி யென்பது ஆநந்தஸ்வரூபத்தையும் குறிக்கின்றன.

நமஸ்காரம் பரதேவதையின் ஸமுகத்தில் செய்தல் வேண்டும். பரதேவதையோ அசரீரி? அசரீரிக்கு ஸமுகம் ஸித்திப்பதில்லை. ஆயினும், அவள் பூமாஸ்வரூபிணி: எங்கும் வியாபித்து விளங்குபவள். ஆதலின் ரிஷிகள் ஆறு திக்குகளிலும் நமஸ்கரித்தனர் என்று அறிதல் அவசியம்.

ब्रूहि यत्तेऽपरं रूपमैश्वर्यं ज्ञानमेव च ।
फलं तत्साधनं मुख्यं साधकं सिद्धमेव च ॥ २७ ॥
सिद्धेस्तु परमां काष्ठां सिद्धेषूत्तममेव च ।
देव्येतत्क्रमतो ब्रूहि भूयस्तुभ्यं नमो नमः ॥ २८ ॥

(இ-ள்) ஓ தேவியே! உன்னுடைய பர அபர ஸ்வ ரூபங்களையும், உனது ஐச்வரியத்தையும், ஞானத்தையும், பலனையும், அதன் முக்கிய ஸாதனத்தையும், ஸாதகத்தன் மையையும், ஸித்திஸ்வரூபத்தையும், ஸித்தியின் பரா காஷ்டையையும், ஸித்தரில் சிரேஷ்டர் இன்னாரென் பதையும் கிரமமாய்த் திருவாய் மலர்ந்தருளப் பிரார்த்திக் கிறோம். தாயே! உன்னுடைய சரணங்களில் பன்முறை நமஸ்காரம் செய்கிறோம்.

(வி-ரை) भूयो भूयो नमस्कृतिः = அடிக்கடி அநேக முறை சிரத்தையோடும் பக்தியோடும் ஸாஷ்டாங்கமாய்ப் பணி வது.

ரிஷிகள் அறியவேண்டும் என்னும் ஜிக்ஞாஸையால் கேட்ட வினாக்கள் மேற்கூறிய பத்துவகையினவாம்.

ஸித்தியின் பராகாஷ்டை யென்பது ஸித்தியின் மேலான முடிவு ஆகும்; என்றால் எதன் அடைவின் பின் னர் அடையத்தகுந்த வேறொரு அடைவு இல்லையோ அது ஸித்தியின் பராகாஷ்டை யெனப்படும்.

**इत्यापृष्टा महाविद्या प्रवक्तुमुपचक्रमे ।**
**दयमाना ऋषिगणे स्पष्टार्थं परमं वचः ॥ २९ ॥**
**शृणुध्वं ऋषयः सर्वं प्रवक्ष्यामि क्रमेण तत् ।**
**अमृतं ह्यागमाम्भोधेः समुद्धृत्य ददामि वः ॥ ३० ॥**

(இ-ள்) எல்லா ரிஷிகளும் இங்ஙனம் பிரார்த்தித்த போது மஹாவித்தையானவள் அவர்கள் பால் கருணை கூர்ந்து அவர்கள் கேட்ட விஷயங்களுக்குத் தெளிவாய்ப் பதிலுரைக்க ஆரம்பித்தனள்.

ரிஷிகணங்களே! கேளுங்கள். நீங்கள் கேட்ட வினாக் களுக்கு வரிசையாய் விடை கூறுகின்றேன். ஸாவதானமாய் இருங்கள்.

ஸகலசாஸ்த்ரங்களாகும் கடலைக் கடைந்து ஸாரமான அம்ருதத்தை உங்களுக்கு அளிக்கின்றேன்.

(வி—ரை) आपृष्टा = எல்லா ரிஷிகளாலும் ஒருமிக்க ஸமஷ்டியாய் வினவப்பட்ட பரதேவதை.

महाविद्या = அகண்டஞானஸ்வரூபிணி. எந்த ஞானத்தின் பின்னர் (ஞாதவ்விய) அறியவேண்டியது மற்றொன்று இராதோ அது மஹாவித்தையெனப்படும். यस्मिन्विज्ञाते सर्वमिदं विज्ञातं स्यात् என்பது பிரமாணம்.

प्रकर्षेण वक्तुं प्रवक्तुं = ரிஷிகள் பக்தியினாலும் சிரத்தையாலும் நமஸ்கரித்ததனால் ஸந்தோஷத்தை யடைந்த மஹாவித்தை ரிஷிகளுக்குள்ள ஸர்வஸந்தேஹங்களேயும் ஒழிக்கவல்ல நல்லயுக்திகளோடுகூடிய விடைகளை மொழிய (ஆரம்பித்தனள்).

स्पष्टार्थं परमं वचः = ரிஷிகளுக்குச் சிரவணாநந்தமுண்டாகும்படி மறுக்கமுடியாத பரமஸித்தாந்தமான அர்த்தத்தோடு கூடிய விடைகள்:—

यत्र सर्वं जगदिदं दर्पणप्रतिबिम्बवत् ।
उत्पन्नं च स्थितं लीनं सर्वेषां भासते सदा ॥ ३१ ॥
यदेव जगदाकारं भासतेऽविदितात्मनाम् ।
यद्योगिनां निर्विकल्पं विभात्यात्मनि केवलम् ॥ ३२ ॥

गम्भीरस्तिमिताम्भोधिरिव निश्चलभासनम् ।
यत्सुभक्तैरतिशयप्रीत्या कैतववर्जनात् ॥ ३३ ॥
स्वभावस्य स्वरसतो ज्ञात्वापि स्वाद्वयं पदम् ।
विभेदभावमाहृत्य सेव्यतेऽत्यन्ततत्परैः ॥ ३४ ॥
अक्षान्तःकरणादीनां प्राणसूत्रं यदान्तरम् ।
यदभाने न किंचित्स्याद्यच्छास्त्रैरभिलक्षितम् ॥ ३५ ॥
परा सा प्रतिभा देव्याः परं रूपं ममेरितम् ।

(இ—ள்) இதில் ரிஷிகள் கேட்ட முதல் பிரச்னத்திற்குப் பராதேவதை விடையளிக்கின்றனள்.

### 1. பரஸ்வரூபம்

எதனிடத்தே, இந்த உலகம் கண்ணாடியில் பிரதிபிம்பம் போலத் தோன்றி, அதிலேயே நிலைபெற்று, அதனிடத்திலேயே லயிக்கின்றதோ, எது ஆத்மஞானமின்றிய அஞ்ஞர்களுக்கு பிரபஞ்சவடிவமாய் விளங்குகிறதோ, யாதொன்று விகற்பமற்ற ஞானயோகிகட்கு நிஸ்தரங்க கம்பீர ஸமுத்திரம்போல் கேவலமான நிச்சல ஸ்வயம் பிரகாச ஆத்மாவாய் விளங்குகின்றதோ, யாதொன்றைத், தாம் அத்வைத நிலையையுணர்ந்தவராயிருந்தும் சித்தத்திலுள்ள பூர்வஸம்ஸ்காரத்தினால் உண்மைப் பக்தர்கள் கபடமின்றிமிகுந்த பிரீதியோடு ஸேவை செய்கின்றனரோ, எது கண்ணுக்குக் கண்ணாயும், பிராணனுக்குப் பிராணனாயும், அந்தக்கரணத்திற்கும் ஆந்தரமாயும் விளங்குகின்றதோ, எது பிரகாசிக்காவிடின் ஒன்றும் விளங்காதோ, எதனை அத்தியாத்ம சாஸ்திரங்கள் லக்ஷணையால் குறிப்பிடுகின்றனவோ

அத்தகைய பராபிரதிபையே (ஸ்வயம் பிரகாசமே) தேவி யாகும் எனது பரஸ்வரூபமென்று கூறப்படும்.

(வி—ரை) यत्र सर्वं முதல் परं रूपं ममेरितं வரை ஐந்தரை சுலோகங்களால் பரதேவதையின் பரஸ்வரூபம் வர்ணிக்கப் படுகின்றது.

“जन्माद्यस्य यतः; यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति” என்பன பிரஹ்மஸூத்திர, உபநிஷத் பிரமாணங்கள். பரஸ்வ ரூபமென்பது உண்மையான பாரமார்த்திக வடிவமாகும், பிரதிபை என்பது ஞானமாம். காலம், தேசம், வஸ்து வென்னும் திரிவித பரிச்சேதங்களோடுகூடிய பிரபஞ்சப் பொருள்களின் ஞானம் அபர ஞானமெனப்படும். பரிச் சேதரஹித கேவலஞானம் பரஞானமெனப்படும். நாம வஸ்துக்களோடுகூடிய இந்த விசித்திர உலகமானது கண் ணுடியில் தோன்றும் பிரதிபிம்பங்கள் போன்றதாகும். அகண்டதர்ப்பணமானது எங்ஙனம் கண்ட பிரதிபிம்பங் களுக்கு ஆதாரமாயிருக்கின்றதோ, அங்ஙனமே அகண்ட பரா பிரதிபையானது கண்டமாயுள்ள கடம், படம் முத லிய ஞானங்களுக்கு ஆதராமாயிருக்கின்றது. கடபடாதி ஞானங்கள் பரிச்சின்னங்களாயிருத்தலின் அவை அபர பிரதிபையின் வடிவினவாகும்.

தேசகாலாதிகளால் பரிச்சின்னப்படாத ஸர்வாதார ஸாமான்ய ஞானத்தில் பிரத்தியக்ஷ ஸித்தமான இந்த ஸர்வப்பிரபஞ்சமும் புதிதாய்த் தோன்றுகின்றது.

புதிதாய் தோற்றுதலேத்தான் சாஸ்திரம் சிருஷ்டி யென்று கூறுகின்றது; தோற்றத்தின் தொடர்ச்சியான தாரையே ஸ்திதியாகும்; தோற்றத்தின் அபாவம்தான்

லயமெனப்படுவது. எங்ஙனம் மித்தையாய்த் தோன்றும் ஸர்ப்பமானது கயிற்றிலே தோன்றி, கயிற்றிலேயே நிலை பெற்று, அக்கயிற்றிலேயே லயத்தை யடைகின்றதோ, எங்ஙனம் ஸ்வப்னப் பிரபஞ்சமானது அந்தக்கரணத்தில் தோன்றி, நிலைத்து, லயமடைகின்றதோ, அங்ஙனமே இந்தப் பிரபஞ்சமானது பரதேவதையின் பரஸ்வரூப மான ஞானத்தில் தோன்றி, நிலைபெற்று லயிக்கின்றது.

விவேகிகள் எங்ஙனம் கயிறே பாம்பாகத் தோன்றி நிலைபெற்று விளங்குகிறதென்றும், அந்தக்கரணமே ஸ்வப்னப் பிரபஞ்சமாகத் தோன்றி, இருப்பதாய் விளங்குகிற தென்றும் அறிவார்களோ, அங்ஙனமே தத்துவஞானிகள் பராப்ரதிபையே ஜகதாகாரமாய் விளங்குகின்றதென அறி வர். அவிவேகிகள் அங்ஙனம் அறிவதில்லை; மற்றோ பாம் பையும் ஸ்வப்ன உலகத்தையும் உண்மையானவையென்று நினைப்பார்கள். ஏனெனில், அவர்களுடைய அஞ்ஞானத் தின் ஒரு அம்சமான ஆவரண தோஷத்தால் ஆகார மாயும் அதிஷ்டானமாயும் உள்ள பராபிரதிபை மறைக் கப்பட்டது போல் தோன்றுகிறது.

ஸ்வரூப ஆவரணம் நீங்கிய ஆத்மஞானிகள் பிராரப் தத்தினால் ஏற்பட்டுள்ள சரீர உபாதியினால் உலகத்தைப் பார்ப்பார்; இங்ஙனம் பார்ப்பினும் அவர்கட்கு உலகம் உண்மையென்னும் மயக்கமில்லை. திரிசியங்களெல்லாம் பராபிரதிபையே யென்னும் திடநிச்சயம் அவர்கட்குண்டு. நீர்க்குமிழிகளையும், நுரையையும், அலைகளையும் ஜலமய மாய்ப் பார்ப்பதுபோல.

உண்மைப் பக்தர்களும் இந்த பரஞானத்தையே அபேத பாவனையோடு ஸேவிக்கின்றனர்.

यत्र सुभक्तैरतिशयप्रीत्या कैतव्यवर्जनात् सेव्यते = அமுக்காகும் த்வைதபாவம் முற்றும் ஒழிந்த பக்தர்களே உண்மைப் பக்தர்கள்.

பக்தியென்பது பரமபிரீதியோடுள்ள சித்தவ்ருத்தி யாகும். परानुरक्तिः भक्तिः என்பது பிரமாணம். ஸ்வஸ்வ ரூப பராப்பிரதிபையை ஸதா அநுஸந்தானம் செய்வதே பக்தியாமென்பது ரஹஸ்யம்.

आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति । आनन्दो ब्रह्मेति व्यजानात् ॥ ஆதலின் பாரமார்த்திக ஞானமே ஆநந்தம்: அபேத தர்சனந்தான் ஞானமாகும், அபேதம், அகண்டம், பூமா வென்பன ஒரு பொருட் சொற்கள். यो वै भूमा तत्सुखम् என்பது உபநிஷத்பிரமாணம்.

உபாஸ்ய உபாஸக பேதத்தை யொழித்துச் செய்யும் உபாஸனையே மேலானதும் சாஸ்திரப்பிரதிபாத்யமும் ஆகும். योऽन्यां देवतामुपास्ते, अन्योऽसावन्योऽहमस्मीति, न स वेद यथा पशुः = எவன், உபாஸிக்கப்படும் தேவதை வேறு, உபாஸகனாகும் தான் வேறு என்னும் பேதபுத்தியோடு உபாஸனை செய்கிறானோ அவன் அஞ்ஞன். அவன் பசுவை நிகர்வான். ஆதலின் பராபக்தியென்பது அத்வைத பாவனையோடு செய்யப்படுவதே யாகும்.

अक्षान्तःकरणादीनाम् =ஞானேந்திரியங்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் முதலியவைகளுக்கும் ஆந்தரமாய் அவைகளுக்குப் பிராணஸூத்திரம் போல் இருப்பது பராப்பிரதிபையாகும். ஜடமான ஒரு பொம்மையின் அங்க சேஷ்டைகளுக்கு ஸூத்திரக்கயிறு எங்ஙனம் பிராண ரூபமாய் இருக்கிறதோ அங்ஙனமே, ஜடங்களாயுள்ள இந்திரியம், அந்தக்கரணம் முதலியவைகளுக்குப் பிராண ரூப

மாய் இருந்துகொண்டு அவைகளைச் சேஷ்டிக்கும்படியும் அறியும்படியும் செய்கின்றது; பிராண ரூபமான பராப் பிரதிபை இன்றேல் எவையும் இல்லை; என்றால், அவை சேஷ்டிக்கவோ அறியவோ மாட்டா. இதில் அதாவது பரஸ்வரூப நிரூபணத்தில் பிரமாணம் சாஸ்திரம் தான். சாஸ்திரங்கள் தேவியின் பராஸ்வரூபத்தை லக்ஷணையால் ஒருவாறு குறிப்பிடுகின்றன.

(அ-கை) இங்ஙனம் பரதேவதையின் பரஸ்வரூபம், ஸர்வஜகத்தின் அபின்ன நிமித்த, உபாதான, விவர்த்த காரணமாயும், ஸர்வஜகதாத்மகமாயும், ஜகததிஷ்டானமாயும், அஹங்கிரஹ உபாஸனையின் உபாஸ்யமாயும், ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களுக்கு அதிஷ்டானமாயும் விளங்குவது நிரூபிக்கப்பட்டது. இனி அபரஸ்வரூபம் நிரூபிக்கப்படுகின்றது.

**ब्रह्माण्डानामनेकानां बहिरूर्ध्वे सुधाम्बुधौ ॥ ३६ ॥**
**मणिद्वीपे नीपवने चिन्तामणिसुमन्दिरे ।**
**पञ्चब्रह्ममये मञ्चे रूपं त्रैपुरसुन्दरम् ॥ ३७ ॥**
**अनादिमिथुनं ह्येतदपराख्यमृषीश्वराः ।**

## 2. அபரஸ்வரூபம்

(இ-ள்) அநேக பிரஹ்மாண்டங்களுக்கும் அப்பால் திருப்பாற் கடலிலுள்ள மணித்வீபத்தில், கதம்பவனத்தின் நடுவே சிந்தாமணி மந்திரத்தில் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேஶ்வரன், ஸதாசிவன் என்னும் பஞ்சப்

பிரஹ்மாக்களாலாகிய மஞ்சத்தின்மேல் வீற்றிருக்கும், ஸ்ரீ திரிபுரஸுந்தரர்—திரிபுரஸுந்தரி யென்னும் அநாதி மிதுனவடிவமே எனது அபரஸ்வரூபமாகும்.

(வி—ரை) அபரஸ்வரூபம் ஸகுண வடிவமானது. "அநேகப் பிரஹ்மாண்டங்களுக்கு அப்பால்" என்பது அநந்த அதாவது நாசரஹித ஐஸ்வர்ய ஸமூகமாகும். "ஸுதாம்புதி:" = நாசரஹித அகண்ட ஞானமாகும் ஜலார்ணவம் (ஸமுத்திரம்).

मणिद्वीपम् = ரத்னத்தீவு. देहो नवरत्नद्वीपः என்னும் பாவனோபநிஷத் பிரமாணத்தின்படி சரீரமே ரத்தினத்தீவாகும். நவதாதுக்களாலாயது சரீரமாம்.

கதம்பவனம் = கல்பகம், ஸந்தானம், ஹரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கதம்பம் என்னும் தேவதருக்கள் கூடிய வனம். இவை மானஸிக விருத்திகளாகும். संकल्पाः कल्पतरवः என்பது பிரமாணம்.

चिन्तामणि सुमन्दिरम् = அந்தக்கரணம்; சிந்தாமணியென்பது பக்தர்கள் கோரிய பலனைத்தரும் இரத்தின விசேஷமாகும். இம்மணியினால் ஆக்கப்பட்ட மந்திரம் (மாளிகை). இதற்கு நான்கு வாயில்களுண்டு. மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்பவையே நான்கு வாயில்கள்.

பஞ்ச பிரஹ்மமயமஞ்சம் = அந்தக்கரணம் பஞ்சபூதங்களின் ஸத்துவகுண ஸமஷ்டி வடிவமாகும்.

பிரஹ்மா—பிரிதிவியின் ஸத்துவகுணம்.
விஷ்ணு—அப்புவின் ஸத்துவகுணம்.
ருத்திரன்—அக்கினியின் ஸத்துவகுணம்.

மஹேச்வரன்—வாயுவின் ஸத்துவகுணம்.

ஸாதாசிவன்—ஆகாசத்தின் ஸத்துவகுணம்.

இவர்களுள் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேச்வரன் என்னும் நால்வரும் மஞ்சத்தின் நான்கு கால்கள். ஸதாசிவன்—பலகை, ஆதலின் அந்தக்கரணத்தின் அதிஸூக்ஷ்ம வடிவமே பஞ்சப்பிரஹ்ம மஹாமஞ்சமாகும். இதன்மேல் வீற்றிருக்கும் அநாதி மிதுனவடிவமே பரதேவதையின் அபரஸ்வரூபம்.

அநாதிமிதுனம்: பிரகாசவிமர்ச ஸாமரஸ்யவடிவம். இது ஒன்றைவிட்டு ஒன்றைப் பிரிக்கமுடியாத அவிநாபாவ ஸ்வபாவமாய் விளங்குவது.

(அ—கை) வேறொரு பிரகாரமாயும் அபரஸ்வரூபம் நிரூபிக்கப்படுகின்றது.

**तथा सदाशिवेशानौ विधिविष्णुत्रिलोचनाः ॥ ३८ ॥**
**गणेशस्कन्ददिक्पालाः शक्तयो गणदेवताः ।**
**यातुधानाः सुरा नागा यक्षकिंपुरुषादयः ॥ ३९ ॥**
**पूज्याः सर्वा मम तनूरपराः परिकीर्तिताः ।**

(இ—ள்) அன்றியும், அங்ஙனமே ஸதாசிவன், மஹேசவரன், ருத்திரன், விஷ்ணு, பிரஹ்மா, கணேசன் ஸ்கந்தன், இந்திரன் அக்கினி முதலிய திக்பாலகர்கள், துர்க்கை, லக்ஷ்மீ, ஸரஸ்வதி முதலிய சக்திகள், வஸு-ருத்ர, ஆதித்யாதி கணங்கள், ராக்ஷஸர், அஸுரர், நாகர் யக்ஷர், கிம்புருஷர் முதலியவர்களிற் சிறந்தவராயும் பூஜி

கத்தக்கவராயுமுள்ளவர்களும் என்னுடைய அபரஸ்வ ரூபமாகவே கூறப்படுகின்றனர்.

இங்ஙனம் ஸதாசிவன் முதல் கிம்புருஷர் ஈறுகக் கூறப்பட்டவர்களுள் எவரெவர் பூஜ்யராயும் அதிகதேஜஸ் ஸுள்ளவராயுமிருக்கின்றனரோ, அவரவர்களின் ஸ்வரூப மும் என்னுடைய அபரவடிவமேயாகும்.

(வி—ரை) முன்னர் காம காமேச்வரர்களாய்க் கூறப் பட்டரூபம் பிரதானமான அபரஸ்வரூபமாகும்: இந்த வடிவம், பிரஹ்மாதி தேவதைகளுக்கு அநுக்கிரஹம் செய் வதற்காகப் பரதேவதையே லீலையாய் ஸ்வீகரித்துக் கொண்ட வடிவமாகும். இது அநாதி; தனது ஸ்வாதந் த்ரியத்தால் தானே ஸ்வீகரித்துக் கொண்டதென்று அறி தல் அவசியம்.

ஸதாசிவன் முதல் கிம்புருஷர் ஈறுகக் கூறப்படுவது அப்பிரதான அபரஸ்வரூபமாகும்.

यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसंभवम् ॥

(இ—ள்) "ஸத்துவகுணம் அதிகமாயுள்ள பொருள் களிலோ சேதனர்களிலோ எவை எவை வைபவத்தோடும் உத்ஸாஹத்தோடும் இருக்கின்றனரோ அவையும் அவர் களும் என் அம்சமென்றறிவாயாக" என்று ஸ்ரீ பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளபடி மேற்கூறியவர்கள் யாவரும் பரதேவதையின் ஐச்வர்யத்தோடும் தேஜஸ், உத்ஸாஹங் களோடும் கூடியுள்ள காரணத்தால் அவர்கள் பரதேவதை யின் அபரவடிவினரேயாவர்.

**मम मायाविमूढास्तु मां न जानन्ति सर्वतः ॥ ४० ॥**
**पूजिताऽहमेव सर्वैर्ददामि फलमीहितम् ।**
**न मत्तोऽन्या काचिदस्ति पूज्या वा फलदायिनी ॥**
**यथा यो मां भावयति फलं मत्प्राप्नुयात्तथा ।**

(இ—ள்) இங்ஙனம் அப்பிரதான அபரவடிவத்தோடு எங்குமிருக்கும் என்னை, எனது மாயையால் மோஹமடைந் திருப்பவர்கள் அறியமாட்டார்கள். எந்த எந்த வடிவத் தில் பூஜித்தாலும், அங்கே அங்கே அதுவதுவாய் இருந்து அவரவர் கோரும் பயனை யளிப்பவள் நானே: பூஜிக்கப்படு தற்கும் பயன் தருதற்கும் என்னைவிட மற்றொருவர் கிடை யாது. எவ்விதம் என்னைப் பாவனை செய்கிறார்களோ அவ் விதமே அவர்கள் என்னிடமிருந்து பயனைப் பெறுகின் றனர்.

(வி—ரை) பூஜ்யதை சக்திக்கே தவிற மற்றொன்றிற் கில்லை. சக்தியற்றவரை யாரும் பூஜிக்கமாட்டார்கள். தேவதைகளிலோ, யக்ஷராக்ஷஸாதியர்களிலோ, அதிக சக்தி, அதிக ஐச்வரியம், அதிக தேஜஸ் உள்ளவர்கள் பர தேவதையின் அம்ச பூதர்களே யாவர்.

### 3. ஐச்வரியம்

**ममैश्वर्यमृषिगणा अपरिच्छिन्नमीरितम् ॥ ४२ ॥**
**अनपेक्ष्यैव यत्किंचिदहमद्वयचिन्मयी ।**
**स्फुराम्यनन्तजगदाकारेण ऋषिपुङ्गवाः ॥ ४३ ॥**

तथा स्फुरन्त्यपि सदा नात्येम्यद्वैतचिद्वपुः ।
एतन्मे मुख्यमैश्वर्यं दुर्घटार्थविभावनम् ॥ ४४ ॥

(இ—ள்) ஹே ரிஷிகணங்களே! என்னுடைய ஐஶ்வரியத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேளுங்கள்! தேசத்தாலும் காலத்தாலும், வஸ்துக்களினாலும் பரிச்சேதப்படாத, அத்வயியாயும் சின்மயியாயுமுள்ள நான் மற்றொரு காரணத்தை யபேக்ஷிக்காமல் அளவற்ற உலகங்களாக ஸ்புரிக்கின்றேன். ஹே ரிஷிசிரேஷ்டர்களே!! இங்ஙனம் எண்ணிறந்த அண்டங்களின் வடிவமாய்த் தோற்றினும் என் ஸ்வபாவமான அத்வய சித்ஸ்வரூபத்தை நான் விடவேயில்லை.

நடக்கக்கூடாத துர்க்கடமான காரியங்களைக் கற்பிப்பதே என்னுடைய முக்கியமான ஐஶ்வரியமாகும்.

ममैश्वर्यं तु ऋषयः पश्यध्वं सूक्ष्मया दृशा ।
सर्वाश्रया सर्वगता चाप्यहं केवला स्थिता ॥ ४५ ॥
नित्यमुक्ता पुनर्मुक्ता भूयो भूयो भवाम्यहम् ।
भूयो विदित्वा स्वात्मानं गुरोः शिष्यपदं गता ॥४६॥
स्वमायया स्वमज्ञात्वा संसरन्ती चिरादहम् ।
निरुपादानसंभारं सृजामि जगदीदृशम् ॥ ४७ ॥
इत्यादि सन्ति बहुधा ममैश्वर्यपरम्पराः ।
न तद्गणयितुं शक्यं सहस्रवदनेन वा ॥ ४८ ॥
शृण्वन्तु संग्रहाद्वक्ष्ये मदैश्वर्यस्य लेशतः ।
जगद्धात्रा विचित्रेयं सर्वतः संप्रसारिता ॥ ४९ ॥

(இ—ள்) ஹே ரிஷிகளே! ஸௌக்ஷ்மபுத்தியினுல் என்னுடைய ஐச்வர்யத்தைப் பரிசீலித்துப் பாருங்கள். எல்லாவற்றிற்கும் ஆஶ்ரயமாயும், எங்கும் வியாபித்துள்ள அந்தர்யாமியாயும் இருந்தாலும், ஒன்றிலும் பற்ருது கேவலையாய் இருக்கின்றேன். நான் எப்பொழுதும் பந்தமற்ற நித்திய முக்தையாயிருந்தும், பின்னும் அடிக்கடி ஆத்மஞானத்தை யுணர்ந்து முக்தியடைபவளாயும் இருக்கின்றேன். தனது மாயையால் தன் உண்மையான ஆத்மஸ்வரூபத்தை அறியாமல் வெகுகாலம் குருவினிடம் சிஷ்யனுய் இருந்துவருகிறேன். பற்பலவிசித்திரங்களோடு கூடிய இந்த உலகை யாதொரு உபாதான காரணமுமின்றிச் சிருஷ்டி செய்கிறேன். இங்ஙனம் என்னுடைய ஐச்வரிய பரம்பரை விளங்குகிறது. என்னுடைய ஐச்வரியத்தை வர்ணித்துக் கூற ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனுலும் முடியாது. சுருக்கமாய்க் கூறுகிறேன் கேளுங்கள். இந்த ஜகத்தில் காணப்படும் விசித்திர விவகாரங்கள் யாவும் என்றைக்கும் நாசமடையாது நித்தியமாயிருப்பன போல் தோன்றுவது எனது ஐச்வரியத்தின் ஸாரமாகும். ஈண்டு ஐச்வரியம் என்பது ஈச்வரஸம்பந்தகுணங்கள். மாயை ஈச்வர ஸம்பந்தி.

(வி—ரை) மூன்ருவது வினவிற்கு ஈண்டு விடையளிக்கப்படுகின்றது.

பரதேவதையின் முக்கியமான ஐஶ்வரியம் கூறப்படுகின்றது.

1. பரதேவதை தன் ஸ்வரூபத்தைவிட பின்னமான மற்ருெரு எந்தக் காரணத்தின் அபேக்ஷையின்றி ஜகத்ரூபமாய் ஸ்புரிப்பது.

ஜகத் ஸ்புரணத்திற்கு ஸ்வரூபபின்னமான காரணத்தின் அபேக்ஷை இல்லையாயினும், தனது அம்சத்தின் பேதத்தை அபேக்ஷித்து பிரபஞ்சவடிவமாய் ஸ்புரிக்கலாமே எனின், அங்ஙனமன்று; ஏனெனின் பரதேவதை அத்வயியாயும் சின்மயியாயும் இருக்கின்ற காரணத்தால், அகண்ட சின்மாத்திரஸ்வரூப பரதேவதைக்கு அம்சம் கற்பிப்பது சரியல்ல.

அங்ஙனமாயினும், அகண்ட சின்மயியான பரதேவதை ஜகத்ரூபமாய்த் தோன்றுங்காலத்தில் நானாரூபபேதத்தோடுகூடிய விசித்திர ஜகத்ரூபம் அப்பரதேவதைக்கு உண்டாகுமல்லவா ? எனின், உண்டாகாது. ஜகத்ஸ்வரூபமாய்ப் பாவிக்கும் போதும், பரதேவதை தனது சித்தாம் சரீரத்தை விடுவதில்லை. தோன்றும் ஜகத்து கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பம்போல்வதாகு மென்று முன்னர் கூறப்பட்டதல்லவா ? கண்ணாடியானது தன்னில் தோன்றும் பிரதிபிம்பவடிவமாகின்றதா ? இல்லை.

2. ஆதலின் பரதேவதையின் ஸ்வரூபம் ஸர்வஜகத்திற்கு ஆஸ்ரயமாயும் அந்தர்யாமியாயும் விளங்குகின்றது. இது ஒரு முக்கியமான ஐஶ்வர்யம்.

3. மாயை ஒரு ஐச்வரியம். இது अघटितघटना पटीयसी = ஸம்பவிக்கக் கூடாதவற்றையெல்லாம் ஸம்பவிக்கச் செய்யும் ஆற்றலுடையது.

4. பரதேவதை ஸர்வஜீவர்களிடத்தும் அந்தர்யாமியாய் இருக்குங் காரணத்தினல் தத்துவஞானிகளிடத்தில் ஆத்மஸ்வரூபமாய்ப் பிரகாசிக்கின்றனள். பாமர அஞ்ஞர்களிடத்தும் விளங்குகிருள்; ஆனல் அந்த ஸ்வயம் ப்ரகாச

பரதேவதா (ஆத்ம) ஸ்வரூபத்தை அவர்கள் உணருவ தில்லை. முமுக்ஷுக்களோவெனின் ஸ்வயம்பிரகாச ஆத்மாபின்ன பரதேவதாஸ்வரூபத்தை அறிந்து துக்கஸாகரத்தினின்றும் கடக்கப் பிரயத்தனம் செய்கிறார்கள். இவ் விஷயத்தைத் தான் "नित्यमुक्ता पुनर्मुक्ता भूयो भूयो भवाम्यहम् । भूयो विदित्वा स्वात्मानं गुरोः शिष्यपदं गता ॥" என்னும் சுலோகத்தால் பரதேவதை கூறுகின்றனள். தத்துவஞானிகள் குருவாயிருக்கின்றனர். முமுக்ஷுக்கள் ஸத்சிஷ்யராயிருக்கின்றனர்; பாமரர்கள் "स्वमायया स्वं अज्ञात्वा संसरन्ती चिरादहम्" தமது மாயையால் தம்முடைய உண்மையான ஆத்மாபின்ன பரதேவதாஸ்வரூபத்தை அறியமாட்டாமல் அநாதிகாலமாய் ஜனனமரண ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தி வருந்துகின்றனர். பாமரர்கள் பூர்வஜன்ம ஸுக்ருதத்தால், எப்படியாயினும் ஜனனமரண துக்கத்தினின்றும் நீங்கி நித்தியாநந்தமாய் இருக்கவேண்டுமென்னும் சுபேச்சையுண்டாய், ஸத்குருபால் சென்று அவருடைய அநுக்கிரஹத்தால் தமது ஆத்மஸ்வரூபத்தை ஸந்தேஹ விபரீதங்களற உணர்ந்து முக்தியடைகிறார்கள். ஞானி, முமுக்ஷு, அக்ஞன் எனப்படும் யாவரும் பரதேவதாஸ்வரூபிகளே யாவர்; ஆதலால் தான் அம்பாள் எல்லோருடைய அநுபவத்தையும் தனதாகக் கூறுகின்றனள்; பரதேவதை ஜடப் பிரபஞ்சாத்மகமாய் விளங்கினாலும் தன்னுடைய அத்வயசின்மயஸ்வரூபத்தைவிடுவதில்லை. சேதன (ஜீவ)ப் பிரபஞ்சாத்மகமாய் விளங்கினாலும் நித்திய முக்தையாய் விளங்குவதில்லை. இது மிகவும் ஆச்சர்யம். இத்தகைய ஆச்சரியத்தோடு கூடி விளங்குவது பரதேவதையின் ஐஶ்வர்யம் என்று கூறியதாயிற்று.

(அ—கை) இங்ஙனம் பரதேவதையின் பரா அபரா ரூபங்களும், ஐஸ்வர்யமும் பிரதிபாதிக்கப்பட்டன. இனி அவித்தியா பந்தத்தினின்றும் விடுதலையடைவதற்கு நான் காவது வினாவாகும் ஞானஸ்வரூபம் பிரதிபாதிக்கப்படு கின்றது.

मम ज्ञानं बहुविधं द्वैताद्वैतादिभेदतः ।
परापरविभेदाच्च बहुधा चापि तत्फलम् ॥ ५० ॥
द्वैतज्ञानं तु विविधं द्वितीयालम्बनं यतः ।
ध्यानमेव तु तत्प्रोक्तं स्वप्नराज्यादिसंमितम् ॥ ५१ ॥
तच्चापि सफलं ज्ञेयं नियत्या नियतं यतः ।

## 4. ஞான ஸ்வரூபம்

(இ—ள்) என்னுடைய ஞானமானது, துவைதம், அத்வைதம் என்னும் பாகுபாட்டாலும், பரம் (உயர்ந்தது) அபரம் (தாழ்ந்தது) என்னும் பேதத்தினாலும் வெகு விதமாயுள்ளது. அவற்றுள் துவைத அபரஞானங்கள் பல விதமேயாகும். தன் ஸ்வரூபத்தைவிட வேறென்று நினைத்துப் பார்க்கும் நானாவித விசித்திர உலகு துவைதமெனப் படும்; ஆதலின், துவைதஞானம் எண்ணிறந்த பேதங்களையுடையது. துவைதஞானம் ஸ்வப்னம், மனோராஜ்யம் இவைகளுக்கு நிகரானது; துவைதஞானம் துவைதத்ருஷ்டாவின் தியானரூபமாயுள்ளது. தியானம் நினைப்பின் அநுஸந்தானரூபமாயிருப்பது பற்றி அது பிரமாணமன்று; ஆதலால் தான் துவைதஞானத்தை ஸ்வப்ன மனோராஜ்யங்களுக்கு ஒப்பிடப்பட்டதென்று அறிதல் அவசியம்.

தியானவடிவ த்வைதஞானம் ஸ்வப்னம் போல் அத்தியாஸம் (பிரமை) எனின், அது நிஷ்பலமானதாக ஆக வேண்டும் என்றுகூறின், அங்ஙனமன்று; கேவலம் நினைப்பு மாத்திரமாயுள்ள த்வைதஞானமும் ஸபலமானதே (பலத்தோடு கூடியதே) ஆகும். இது ஈஶ்வர நியதி.

(வி—ரை) ஞானம் வெகுவிதம்— த்வைதம் = கர்மோபாஸனைகள். அத்வைதம் = அநுபவரூபம். பரம் = அபரோக்ஷஞானம். அபரம் = பரோக்ஷஞானம்.

த்வைதஞானம் பலவகையாய் இருப்பதற்கு என்ன காரணமெனின், தன்னைவிட வேறாக இருப்பதாகக்கருதும் இரண்டாவது வஸ்து பற்பல பேதங்களோடு இருப்பதால் அவற்றைப் பற்றுக் கோடாகப் பற்றியுள்ள ஞானங்களும் பலவகையே யாகும்.

தியானம்: தியாதா (தியானம் செய்பவன்) வினுடைய ஸ்வரூபத்தைவிட அந்நியமாய் இருப்பதாக நினைக்கப்படும் மூர்த்தி, மந்த்ரம் முதலிய விஷயங்களின் தியானமும் த்வைதஞானமே. தியானம் பிரமாண ஸித்தமன்று. தியாதாவின் வசமா யிருப்பதால். சிலாரூபத்தை ஒரு தேவதையின் வடிவமென்றும் நினைக்கலாம்; கல் என்றும் நினைக்கலாம். ஆனால் தேவதையென்று நினைப்பது தியானமாகும். கல் என்று அறிவது பிரத்தியக்ஷப் பிரமாண ஸித்தமாகும்.

தியானமென்னும் த்வைதஞானம் பிராந்தி (அத்தியாஸ) துல்யமாயிருந்தாலும், அது நிஷ்பலமானதன்று. ஏனெனின் பிரமம் அல்லது பிராந்திஞானம் இருவகைத்து. ஒன்று ஸபலபிராந்தி (ஸம்வாதிப் பிரமை);

மற்ருென்று நிஷ்பலப் பிராந்தி (விஸம்வாதிப் பிரமை). சாளிக்கிராவத்தில் விஷ்ணு ஞானமும், லிங்கத்தில் பரமேச்வர ஞானமும் ஈச்வர நியதியாகிய சாஸ்திரப் பிரமாணத்தால் ஸபலமேயாகின்றன.

अपरं चापि विविधं तत्र मुख्यं तदेव हि ॥ ५२ ॥
प्रोक्तमुख्यापरमयध्यानं मुख्यफलक्रमम् ।
अद्वैतविज्ञानमेव परविज्ञानमीरितम् ॥ ५३ ॥

(இ—ள்) துவைதஞானம் அபர (தாழ்ந்த) ஞானமே. துவைத வடிவ அபரஞானமும் பலவகையாகும். அவற்றுள், சிந்தாமணிக்ருஹத்தில் பஞ்சப்பிரஹ்மமய மஹா மஞ்சத்தின்மேல் வீற்றிருக்கும் அநாதி மிதுனவடிவத்தைத் தியானிப்பதே சிறந்ததும் முக்கியமானதும் ஆகும். இந்த அபர விக்ஞானத்திஞல் மிகவும் சிரேஷ்டமான பயன் அடையப்படுதலிஞல் இது முக்கியமானது.

அத்வைத ஞானமே பரவிக்ஞானமாகும்.

मामनाराध्य परमां चिरं विद्यां तु श्रीमतीम् ।
कथं प्राप्येत परमां विद्यामद्वैतसंज्ञिकाम् ॥ ५४ ॥
तदेवाद्वैतविज्ञानं केवला या पराचितिः ।
तस्याः शुद्धदशामर्शो द्वैतामर्शाभिभावकः ॥ ५५ ॥

(இ—ள்) ஸகுணமூர்த்திகளான ஸதாசிவாதிகளுக்கு மேலானவளும், ஸ்ரீமதியும், சிரேஷ்டையும், வித்தியாஸ்வரூபிணியுமான என்னை சிரத்தையோடு நிரந்தரமாக

ஆராதனை செய்யாமல், எங்ஙனம் ஜீவர்கள் அத்வைத பர விக்ஞானத்தை யடையமுடியும்?

த்வைதங்களான திரிசியங்கள் சற்றும் இல்லாமல் ஒழிந்த கேவலநிலையில் விளங்கும் அநவச்சின்ன சித்ரூபமே அத்வைத விக்ஞானமாகும். த்வைதத் தோற்றத்தோடு கூடியது அசுத்த தசை; த்வைதத் தோற்ற மில்லாதது சுத்ததசை. சுத்ததசையில் அத்வைத–பரவிக்ஞான விமர்சமுண்டு.

(வி—ரை) முன்னர் அபர ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறுங்கால் முக்கிய அபர ஸ்வரூபமாகக் கூறப்பட்ட அநாதிமிதுன ஸ்வரூபத்தைத் தியானிப்பதால் கிரமமாக முக்கிய பலமாகிய மோக்ஷம் ஸித்திக்கின்றது. கிரமமாக, என்பதனுல் சித்தசுத்தி, விவேகம், வைராக்கியம், சமாதி ஸம்பத்தி, முமுக்ஷுத்துவம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனம், ஸமாதி இவைகளைக் கொள்ளல் வேண்டும்.

அமுக்கிய அதாவது அப்பிரதான அபர ஸ்வரூப மாகக் கூறப்பட்ட ஸதாசிவாதிகளைத் தியானிப்பதால் முக்கிய அதாவது பிரதான அபரஸ்வரூபத்தியானமானது ஏற்படுகின்றது. இந்த முக்கிய அபரஸ்வரூபத்தியானத்தினுல் பரஸ்வரூப அத்வைத ஞானமுண்டாகின்றது; இந்த ஞானம் தான் அஞ்ஞான நாசகமாகும். தியானரூப த்வைதஞானம் அஞ்ஞான நாசகமன்று. அங்ஙனமாயின், முக்கிய–அபரஞானஸ்வரூப த்வைத ஞானத்தினுல் யாது பயன்? எனின், அதற்கு ஸமாதானமாவது:—“मामनाराध्य परमां चिरं विद्यां तु श्रीमतीम् । कथं प्राप्येत परमां विद्यां अद्वैतसंज्ञिकाम् ॥ என்று பரதேவதையே கூறியிருக்கிறுள். ஆதலின் மேற்கூறிய முக்கிய அபர விக்ஞானம் பரவிக்ஞானரூப அத்வைத ஞானத்திற்கு நேர் ஸாதனமாகலாம்.

சங்கை :—பரவடிவ கேவல சித்தானது, சித்திரங் களுக்குச் சுவர்போல, அக்ஞானஸஹித ஜகத்திற்கு ஆஶ்ரய மாயிருப்பதால் அந்த கேவல சித் ஸ்வரூபம் எங்ஙனம் அஞ்ஞான நிவர்த்தகமாகும் ?

ஸமாதானம் :—துவைதத் தோற்றமற்ற சுத்த தசை யில் ஞேயமற்ற ஸாமான்யஞானம் இருக்கிறது. அந்த ஸாமான்ய ஞானத்தை தோஷமின்றிய பிரமாணத்தினல் விமர்சிக்கின், அபரோக்ஷ ஞானம் ஏற்படுகின்றது. இது ஞேய (நாம-ரூப) வர்ஜித ஸாமான்ய ஞானவிமர்சத்தின் பயனுன அகண்ட அத்வய சித்ஸ்வரூபவிசேஷ அபரோக்ஷ ஞானமெனப்படுகின்றது. இதைத்தான் சாஸ்திரங்கள் விருத்தி ஞானமென்று கூறுகின்றன. இதனுல் மூல அஞ் ஞான நாசமும் அத்வைத ஆத்மஞானமும் ஸ்வயம் பிரகா சமாய் விளங்குகின்றன. இதனுல், துவைத ஞானத்தினுல் ஏற்படும் பயம் நிவர்த்தியாகின்றது. பிரதிபிம்பத்திற்கு ஆஶ்ரயமாயும் ஆதாரமாயுமுள்ள கண்ணுடி ஞானத்தினுல், பிரதிபிம்பமான புலியினுல் ஏற்படும் பயம் நிவர்த்தி யாகின்றதல்லவா ?

**चित्तं यदा स्वमात्मानं केवलं ह्यभिसंपतेत् ।**
**तदेवानुविभातं स्याद्विज्ञानमृषिसत्तमाः ॥ ५६ ॥**
**श्रुतितो युक्तितो वापि केवलात्मविभासनम् ।**
**देहाद्यात्मावभासस्य नाशनं ज्ञानमुच्यते ॥ ५७ ॥**

(இ—ள்) சித்தமானது திரிசிய வடிவ பரிணமமாகும் களங்கத்தினின்றும் நீங்கி, முன்னர் பரோக்ஷமாய் இருந்த தனது உண்மையான ஆத்மஸ்வரூபத்தை ஸதா, அதாவது

எல்லா அவஸ்தைகளிலும் அனுஸந்தானம் செய்து ஸாக்ஷாத்கரிப்பதே பரவிக்ஞானமாகும்.

ஓ ரிஷிசிரேஷ்டர்களே! வேதாந்த விசாரரூப சிரவணத்தினாலும், சுருதிவாக்கியங்களுக்கு அநுஸாரியாகிய யுக்தியைக்கொண்டு செய்யும் மனனத்தினாலும், தேஹாதிகளில் ஆத்மத்தோற்றத்தை யொழித்து, கேவலமாயும் சரீரத்திரய விலக்ஷணமாயுமுள்ள ஆத்ம விளக்கத்தைப் பிரத்தியக்ஷமாய் உணர்தலும் பரவிக்ஞானமாகும்.

(வி—ரை) முன்னர் கூறப்பட்ட பரவிக்ஞானத்தையே மறுபடி வேறுவிதமாகக் கூறுகின்றனள் பரதேவதை. ஹே ரிஷிசிரேஷ்டர்களே! துவைதங்களான திரிசியங்கள் சற்றும் தோன்றாமல் ஒழிந்த கேவல நிலையில் விளங்கும் அநவச்சின்ன சித்ரூபமே அத்வைத பரவிக்ஞானமாகும்.

துவைதத் தோற்றமுள்ளது அசுத்ததசை; அஃதொழிந்தது சுத்ததசை; சுத்த தசையில் தான் கேவலாத்ம விமர்சனமுண்டு.

பிரத்தியக்ஷாதி பிரமாணஸித்தமாதலின் ஸத்தியமென்று திரிசியங்களைக் கருதாமல், சுத்த சித்தத்தினால் திரிசியங்களுக்கு ஆதாரமாயும், அதிஷ்டானமாயுமுள்ள கேவலாத்மஸ்வரூபத்தை யபரோக்ஷமாய் உணர்தல் பரவிக்ஞானமாம். பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சப்தம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்பவை பிரமாணங்களாகும், இவை அக்ஞான கார்யப் பிரபஞ்ச திரிசியங்களோடு ஸம்பந்தப் பட்டுள்ள காரணத்தால் துஷ்டங்களாகும். தோஷத்தோடுகூடியது துஷ்டமெனப்படும்.

அக்ஞானமே தோஷமாகும்; வேதாந்த மஹாவாக்கியங்களாகும் சாப்தப் பிரமாணம் நிர்த்துஷ்டமானது.

சித்தம் = சலனத்தோடு கூடிய ஞானசக்தி.

அபிஸம்பதனம் = தேச கால வஸ்து பரிச்சேதங்களின் நீக்கத்திலுல் எங்கும் அகண்டமான ஸமஸ்வரூபத்தில் அழுந்துதல்.

अनुविभातम् = அகண்ட, ஸமஸ்வரூபத்தில் அழுந்தியிருத்தலாகிய ஸமாதியிலிருந்து நழுவிய தசையில் முன் அனுபவித்த சுத்த சித்ரூபப்பிரத்யபிக்ஞைக்கு அநுவிபாதம் என்று பெயர்.

**तदेव भवति ज्ञानं यज्ज्ञानेन तु किंचन ।**
**भासमानमपि क्वापि न विभायात्कथंचन ॥ ५८ ॥**

(இ—ள்) எந்த ஒரு ஞானத்திலுல் அபர வடிவ திரிசியங்கள் சற்றே தோன்றினும் தோன்றுதனவாய் ஆகின்றனவோ அதுதான் பரவிக்ஞானமெனப்படும்.

(வி—ரை) இது காறும் பரவிக்ஞானத்தையும் அபர விக்ஞானத்தையும் கூறி ஞானத்தின் பயனைக் கூறுவதற்கு உத்தேசித்து முன்னதாக துவைத ஞானத்தை வேறு பிரித்து அறிவதற்குச் சிறந்த பரவிக்ஞானம் கூறப்படுகின்றது. பரவிக்ஞானத்தைப் பற்றிப் பலமுறை கூறுதல் "கூறியது கூறல்" என்னும் தோஷமாகாதோவெனின்; ஆகாது. இங்ஙனங் கூறுதல் இதர அநாத்ம சாஸ்திரங்களில் தோஷமாகுமேயன்றி அத்தியாத்ம சாஸ்திரத்தில் தோஷமாகாது. மற்றோ இப்புநருக்தியானது விஷயத்தைத் த்ருடீகரிப்பதனுல் பூஷணமேயாகின்றது.

கண்ணுடியின் தத்வம் (உண்மை) உணர்ந்தவனுக்கு, அதில் தோன்றும் பிரதிபிம்பங்கள் பாதிக்கப்படாதன வாய் ஆதாரஸத்தையாகிய கண்ணுடிக்கு வேருக விளங் காதன போல், ஆத்ம தத்துவமுணர்ந்தவனுக்குக் காரிய கரண ஸங்காதத்திஞல் திரிசியங்கள் லேசமாய்த் தோன் றினும் "அவை ஆத்ம ஸ்த்தையைவிட வேருக இல்லவே இல்லை; ஆத்மாதான் தோன்றுகின்றது" என்னும் நிச்சய ஞான மெதுவோ அதுவே மேலானது.

तदेवाद्वैतविज्ञानं यद्विज्ञानेन किंचन ।
अविज्ञातं नैव भवेत्कदाचिल्लेशतोऽपि च ॥ ५९ ॥

(இ—ள்) யாதொரு ஞானத்திஞல், ஒரு பொழுதும் சற்றுவது அறியப்படாததாக, ஒன்றுமே இராதோ அதுவே அத்வைத விக்ஞானமாம்.

(வி—ரை) एकविज्ञानेन सर्वविज्ञानं भवति என்னும் சுருதிப் பிரமாணத்தின்படி எந்த ஞானம் ஏற்பட்டால் எல்லாம் அறியப்பட்டனவாக ஆகின்றனவோ அதுவே அத்வைத ஞானமெனப்படும்.

முன் சுலோகத்தில் "नेह नानास्ति किंचन" "இங்கே நாஞவென்பது சற்றும் இல்லை" என்னும் பிரமாணத்தின்படி ஆத்மப் பிரகாசத்தில் அநாத்ம திரிசியங்கள் ஒன்றுமே புலப்படாது என்று கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் "यस्मिन् ज्ञाते सर्वं विज्ञातम्" 'எது அறியப்பட்டால் எல்லாம் அறியப்பட்டதாகுமோ' என்று கூறப்பட்டது அறியத்தக்கது.

सर्वविज्ञानात्मरूपं यद्विज्ञानं भवेत्खलु ।
तदेवाद्वैतविज्ञानं परमं तापसोत्तमाः ॥ ६० ॥

(இ—ள்) ஹே தாபஸோத்தமர்களே! பரிச்சின்னங்களான ஸர்வ திரிசிய அபர ஞானங்களுக்கும் ஆத்மரூபமாய் அதாவது ஆதாரஸ்வரூபமாய் எந்த பரவிக்ஞானம் நன்கு உணரப்படுகின்றதோ, அதுதான் மேலான அத்வைத விக்ஞானமாகும்.

(வி—ரை) **सर्वविज्ञानात्मरूपम्** = எல்லா அயதார்த்த விசேஷ ஞானங்களுக்கும் ஸத்தாஸ்பூர்த்தியைத் தரும் ஆத்மஸ்வரூப பாரமார்த்திக யதார்த்த ஸத்தாஸ்பூர்த்தி. அயதார்த்த விசேஷஞானங்கள் கற்பிதங்களாகும்.

**अद्वैतविज्ञानम्** = பாரமார்த்திக ஸதாநந்த சித்ஸ்வரூப விசேஷஞானம்.

**परमम्** = சிரேஷ்டமானது; என்றால் பரம புருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத் ஸாதனமானது என்பது கருத்து.

ஒரு பெரிய தர்ப்பணத்தில் அநேகவஸ்துக்கள் பிரதிபலிக்கின்றன. அத்தர்ப்பணத்தில், பிரதிபலிக்கும்பொருள்கள் எவ்வளவு இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டு அந்த தர்ப்பணத்தை மறைக்கின்றனவோ அப்பொருள்கள் யாவும், அவற்றிற்கு ஆதாரமான தர்ப்பணமின்றி விளங்கா. பரிச்சின்னமான ஒரு சிறு தர்ப்பணமும் (கண்ணாடியும்) அம்மஹா தர்ப்பணத்தில் பிரதிபலிக்கலாம். இங்ஙனம் பொருள்களும் சிறுகண்ணாடியும் பிரதிபலிக்கும் மஹா தர்ப்பணம் போன்றது அத்வைத பரவிக்ஞானமாம். வியாபகமான அகண்ட மஹாதர்ப்பண நாட்டத்தில் பிரதிபிம்

பங்களான வஸ்துக்களும், அவற்றின் கண்டிதமான விஷய ஞானங்களும் தோன்றும். இது மிகவும் ஸூக்ஷ்மமும் ரஹஸ்யமுமாகும்.

**जाते यादृशविज्ञाने संशयाश्चिरसंभृताः ।**
**वायुनेवाभ्रजालानि विलीयन्ते परं हि तत् ॥ ६१ ॥**

(இ—ள்) எத்தகைய விக்ஞானம் ஒரு மஹா புருஷனுக்கு உதிக்குமானால், நீண்டகாலமாக அவன் ஹ்ருதயத்தில் குடிகொண்டிருந்த ஸந்தேஹங்கள் யாவும் சூறைக் காற்றினால் சிதறுண்ட மேகங்களைப் போல் நாசமாய்விடுமோ அத்தகையது தான் பரவிக்ஞானம்.

(வி—ரை) संशयाः चिरसंभृताः = கண்ணுடியில் தோன்றும் பிரதிபிம்பம் போன்ற இந்தப் பிரபஞ்சசம்பந்தமான அனுதியான ஸம்சயங்கள்; அவை.

1. பிரபஞ்சம் உண்மையானதா? அன்று?
2. இந்த ஜகத்திற்கு ஒருகாரணம் உண்டா இல்லையா?
3. உண்டெனில் அது பிரதானமாகும் பிரக்ருதியா? அல்லது பரமாணுக்களா?
4. நான் என்பது சரீரமா, பிராணனு, சித்தமா?
5. நித்தியாநந்த வடிவ மோக்ஷத்திற்கு ஸாதனம் கர்மமா? உபாஸனையா? ஞானமா? என்பனவாதி பலவாகும்.

இவ்வெல்லா ஸம்சயங்களும் பரவிக்ஞானத்தினுல் நாசமாகின்றன.

“भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥” என்பது இதற்குப் பிரமாணமாம்.

कामादिवासनाः सर्वा यस्मिन्सन्ति न किंचन ।
स्युर्भग्नदंष्ट्राहिरिव तद्विज्ञानं परं स्मृतम् ॥ ६२ ॥

(இ—ள்) எந்த முமுக்ஷுவினிடத்தில் காமாதி துர்வாஸனைகள் கிஞ்சித்தும் இல்லையோ, இருந்தாலும் அவை பற்கள் பிடுங்கப்பட்ட பாம்புபோல் ஆகுமோ, அவனுடைய ஞானம் பரவிக்ஞான மெனப்படும்.

(வி—ரை) இந்த சுலோகத்திலும், முன் சுலோகத்திலும் பரவிக்ஞான ஸாதகனுடைய தன்மையைக் கூறுவதன் மூலமாய் அத்வைத பரவிக்ஞானம் கூறப்பட்டது அறியத்தக்கது.

காமம், குரோதம் முதலிய துர்வாஸனைகள் சித்தத்தில் தினையளவு இருந்தாலும் அத்தகைய அசுத்த சித்தத்திற்குப் பரவிக்ஞானம் பிரகாசிக்காது; இங்ஙனமே ஸந்தேஹங்கள் இருந்தாலும் பரவிக்ஞானம் பிரகாசிக்காது.

"பற்கள் பிடுங்கப்பட்ட பாம்பு போல்" என்னும் திருஷ்டாந்தத்தினால், காமாதி துர்வாஸனைகளால் ஏற்படும் துன்பம் இல்லையென்பது ஸூசிக்கப்பட்டது அறியத்தக்கது.

विज्ञानस्य फलं सर्वदुःखानां विलयो भवेत् ।
अत्यन्ताभयसंप्राप्तिर्मोक्ष इत्युच्यते फलम् ॥ ६३ ॥

## 5. ஞானத்தின் பலன்

(இ—ள்) ஸர்வதுக்கங்களின் நாசமே ஞானத்தின் பலமாகும். பயத்தின் அத்தியந்த அபாவரூப அபய

ஸ்வரூபத்தின் அடைவே மோக்ஷமாம். இதுதான் ஞானத்தின் பலன்.

(வி—ரை) " अनर्थनिवृत्तिः आनन्दप्राप्तिरेव मोक्षः " என்னும் உபநிஷத் பிரமாணத்தின்படி ஸகல அநர்த்த (துக்க) ங்களின் நாசமும், அபயரூப பரமாநந்தத்தின் அடைவும் மோக்ஷமெனப்படும். இது அத்வைத ஆத்மஞானத்தின் பிரயோஜனமாகும். " तरति शोकमात्मवित् " என்றும், "ज्ञानादेव तु कैवल्यम् " என்றும் உள்ள பிரபல பிரமாணங்களால் ஞானத்தின் பயன் சோக நிவர்த்தியும், கைவல்ய ஸ்வரூப அபயஸ்திதியுமா மென்றேறப்படுகின்றது. கேவல பாவம் கைவல்யமெனப்படும். இது இரண்டாவதின்றிய அத்வைத ஸ்திதியாகும். " द्वितीयाद्वै भयं भवति " தனக்கு அன்னியமாய் ஒரு பொருளுண்டு என்னும் நினைப்பே பயத்திற்குக் காரணம்.

विलयः = மறுபடி யுண்டாகாமல் நசிப்பது. ஸகல அநர்த்தங்களின் விலயமே மோக்ஷமாமெனின், எல்லோருக்கும், ஸுஷுப்தியில், அநர்த்தங்களாகும் துக்கத்தின் லயம் (அபாவம்) காணப்படுகின்றது. ஆதலின் பாமர அஞ்ஞானிகளுக்கும் மோக்ஷம் ஸித்தித்ததாகக் கூறவேண்டும். எனின், அங்ஙனமன்று. அவர்களுக்கு ஸுஷுப்தியில் துக்கத்தின் லயம் இருப்பினும் எதிர் காலத்தில் அதாவது ஜாக்கிர ஸ்வப்னங்களாகிற அவஸ்தாந்தரங்களில் துக்கத்தின் அடைவு இருப்பதால், ஸுஷுப்தியில் ஸர்வ துக்கங்களின் நாசம் இல்லை. நிவர்த்தி இரண்டு வகை. லயரூப நிவர்த்தி ஒன்று; நாசரூப நிவர்த்தி மற்றொன்று. துக்கங்களின் அத்தியந்த நிவர்த்திதான் அத்தியந்த அபயத்தின் அடைவு ஆகும்.

**भयं द्वितीयसंकल्पादद्वैते विदिते दृढम् ।
कुतः स्याद्द्वैतसंकल्पस्तमः सूर्योदये यथा ॥ ६४ ॥**

(இ—ள்) இரண்டாவதன் கற்பனையாலே தான் பய முண்டாகின்றது; திடமான அத்வைதஞானமுதிக்குமே யாயின் துவைதக் கற்பனைகள் ஏது? சூரிய உதயத்தின் முன் இருள் இருக்குமா?

(வி—ரை) **सदेव सोम्य इदमग्र आसीदेकेमवाद्वितीयम् । नेह नानास्ति किंचन ॥** என்னும் உபநிஷத் பிரமாணத்தின்படி நித்தியமாயுள்ள பொருள் ஒன்றே; அதனுல் அது அத்வி தீயமானது. நாஞவென்பது கிஞ்சித்துங் கிடையாது. துவைதம் கற்பனை; இது அக்ஞான காரியம். இது வாஸ் தவமல்ல; மயக்க காலத்தில் தோன்றி மெய்யுணர்வாகும் வாஸ்தவ அத்வைத ஸ்திதியை யுணருங்காலத்தில் ஒழி ந்து விடுகின்றது. துவைதக் கற்பனையே ஸர்வ அநர்த்தங் களுக்கும் காரணம்.

**ऋषयो न भयं क्वापि द्वैतसंकल्पवर्जने ।
अतो यत्फलमन्यत्स्यात्तद्भयं सर्वथा भवेत् ॥ ६५ ॥**

(இ—ள்) ரிஷிகளே! துவைதக் கற்பனை ஒழிந்தால் பயமேது? ஆகையால் துவைத கற்பனையுள்ள காலத்தில் அவற்றுல் உண்டாகும் பலம் எவ்வகையிலும் பயமே யாகின்றது, துவைதமே அன்னியம்.

(வி—ரை) "பயத்திற்குக் காரணமாயும் நிமித்த மாயுமுள்ள துவைதக் கற்பனைகள் ஒழிந்தால்" என்று கூறப்பட்டதனுல் துவைதக் கற்பனை மித்தையென்று ஸித்

திக்கின்றது. துவைதம் அத்வைதத்தில் அத்தியஸ்தம். ஆதலின், அதிஷ்டானமாகும் அத்வைதஞானமுதிக்கின், துவைதப் பிராந்தி நாசமாகின்றது.

தன் ஸ்வரூபத்தை விட அன்னியமாய்த் தோன்றும் துவைதத்தின் பயன் பயமேயாகும். ஏனெனின் தன் ஸ்வரூபம் அபயவடிவம், "आनन्दो ब्रह्मेति व्यजानात्" என்னும் ஶ்ருதி ஆத்மாபின்ன பிரஹ்மஸ்வரூபம் ஆநந்தமென்று கூறுகிறது. ஆநந்தவடிவ தன் ஸ்வரூபத்தைவிட அன்னியமானது அநாநந்தரூப துக்கமேயாகவேண்டும்.

**अन्तवत्तु द्वितीयं स्याद्भयो लोके समीक्षणात् ।**
**सान्ते भयं सर्वथैवाभयं तस्मात्कुतो भवेत् ॥ ६६ ॥**

(இ—ள்) துவைதமானது உலகில் தோன்றும் திரிசியங்களைப்போல ஒரு கால் நாசத்தையடையும். நாசத்தோடு கூடிய ஒருபலன் பயவடிவமாகவே இருத்தல் வேண்டும். ஆதலின் எப்பொழுதும் எவ்விதமாகவேனும் அந்தத்தோடு கூடிய துவைதத்தினுல் அபயம் எப்படி உண்டாகும்?

(வி—ரை) துவைதம் நாசத்தோடு கூடியது. கற்பிதமாதலின்; எது எது கற்பிதமாமோ அதுவது நாசத்தோடு கூடியதாகும். ஸ்வப்னப் பிரபஞ்சம்போல.

உலகத்தில் பத்தினீ, புத்ர, தன, க்ருஹாதிகள் ஒரு காலத்தில் ஸுக ஸாதனங்களாயிருப்பினும் அவை நாசமுறுங் காலத்தில் துக்க ஹேதுக்களாவன எல்லோருக்கும் அநுபவஸித்தமாம். ஆதலின் அநித்திய துவைதம் பயவடிவமே: பயவடிவ ஸாந்தத்துவைதத்தினுல் அபயஸ்வ

ரூப நித்தியாநந்தமோக்ஷம் எங்ஙனம் ஸித்திக்கும்? ஸித்திக்கவே ஸித்திக்காது.

संयोगो विप्रयोगान्तः सर्वथैव विभावितः ।
फलयोगोऽपि तस्माद्धि विनश्येदिति निश्चयः ॥ ६७ ॥

(இ—ள்) இங்ஙனம் ஸ்வரூபத்தைவிட அன்னிய துவைத பலம் பயப்பிரதமானதென நிர்ணயித்து, அப்பலத்தின் ஸம்பந்தமும் பயப் பிரதமாகுமென்று நிரூபிக்கப்படுகின்றது. அன்னிய பிரயோஜனத்தின் ஸம்பந்தமும் வியோகத்தோடு கூடியதேயாகும். ஏனெனின் எப்பொழுதும் ஸம்யோகம் வியோகத்தோடு கூடியதே என்பது நியமம்.

(வி—ரை) ஸம்யோகமென்பது இரண்டு வஸ்துக்களின் ஸம்பந்தமாகும். இரண்டன் தன்மை (துவைதம்) தேசபரிச்சேதமும் வஸ்துபரிச்சேதமுமுடையது. ஆதலின், துவைத வஸ்துக்கள் அவயவிகளாகவும், கண்டப் பொருள்களாகவும் இருத்தல் வேண்டும். ஸாவயவ கண்டப்பொருள்கள் யாவும் உத்பத்தி நாசமுடையனவாம். உத்பத்தி நாசமுடைய இரண்டு பொருள்களின் ஸம்யோக ஸம்பந்தமும் உத்பத்தி நாசமுடையதே; ஆகையால் ஞானத்தின் பலன் ஸ்வரூபத்தைவிட அன்னியமாயிருக்குமேயானால், அதனோடு அப்பயனை யடைபவனுக்குள்ள ஸம்பந்தமும் நாசமுடையதேயாகும். நாசமுடைய பலத்தோடு கூடுவோனும் நாசமாவான். இது சிதையாத ஸித்தாந்தமாம்.

यावदन्यत्फलं प्रोक्तं भयं तावत्प्रकीर्तितम् ।
तदेवाभयरूपं तु फलं सर्वे प्रचक्षते ॥ ६८ ॥

यदात्मनोऽनन्यदेव फलं मोक्षः प्रकीर्तितः ।
ज्ञाता ज्ञानं ज्ञेयमपि फलं चैकं यदा भवेत् ॥ ६९ ॥
तदा हि परमो मोक्षः सर्वभीतिविवर्जितः ।

(இ—ள்) எதுவரை பலனானது தனக்கு அந்நியமானதெனக் கூறப்படுகிறதோ அதுவரை பயமுண்டென்று கூறப்படும். ஆனால் ஞானத்தின் பலனோ அபயஸ்வரூபமாக எல்லா ஞானிகளாலும் கூறப்படுகின்றது. ஆதலின் மோக்ஷவடிவ பலனானது ஆத்மஸ்வரூபத்திற்கு அநந்நியமாகவே இருத்தல் வேண்டும்.

அறிபவன், அறிவு, அறிபடுபொருள், பயன் என்பன எப்பொழுது ஏகஸ்வரூபமாகின்றனவோ, அப்பொழுது தான் எல்லாப் பயமும் நீங்கிய அபயஸ்வரூபமோக்ஷம்; (அடையாமல் அடையப்படுகின்றது).

(வி—ரை) அந்நியம் = துவைதம் —பயம்.
அநந்நியம் = அத்வைதம்—அபயம்.

ஞானத்தின் பயன் அத்விதீய ஆத்மஸ்வரூபமே யாகுமென்று நிரூபித்து, திரிபுடியின் ராஹித்திய (நீக்க) த்தினால் அத்விதீய அபயஸ்வரூப பரமமோக்ஷம் அடையப்படுகின்றதென்று கூறப்பட்டது.

ज्ञानं विकल्पसंकल्पहानं मौढ्यविवर्जितम् ॥ ७० ॥
ज्ञातुः स्वच्छात्मरूपं तदादावनुपलक्षितम् ।
उपलक्षक एवातो गुरुः शास्त्रं च नेतरत् ॥ ७१ ॥

(இ—ள்) ஸங்கல்ப விகல்பங்களற்று, மூடத்தன்மை (இருள்–அக்ஞானம்) இன்றிய (சுத்தஸ்வரூப ஸ்புரணமே) ஞான மெனப்படும்.

இத்தகைய சுத்தஞானம் அறிபவனது ஸ்வரூபமாகவே எப்பொழுதும் இருந்தாலும், பழக்கமின்மையால் அதைக் குறிப்பிட்டறிய முடியவில்லை. ஆகையால் ஸ்வரூபஞானமானது, தனக்கு வேறான தன்மைகையாலும், மோஹத்தினால், பழக்கமின்மை காரணமாகக் குறிப்பிட்டறியப்படாமல் இருக்கிறபடியால் முமுக்ஷுவுக்குள்ள மோஹத்தை யொழித்து, அவனால் ஸ்வரூபஞானத்தை யுணரும்படி செய்வது குரு, சாஸ்திரங்களின் கடமையாகும். குருவும், சாஸ்திரமும் தவிர மற்றெதுவும் ஞானத்தை யுணர்த்தாது.

(வி—ரை) ஞான லக்ஷணத்தில் "மூடத் தன்மையற்ற" என்னும் விசேஷணம், ஸுஷுப்தியின் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டேயாகும். ஸுஷுப்தியில் ஸங்கல்பவிகல்பங்கள் இல்லையாயினும், மூடத்தன்மை (இருள்–அக்ஞானம்) இருக்கிறது.

ஞாதாவின் ஸ்வரூபம் மேற்கூறிய ஞானவடிவமே. ஆயினும், அவன் அதை யுணரவில்லை. துவைதப் பிரபஞ்சத்தில் அந்தர்க்கதமான ஞாதாவின் ஞானம் துவைத ஞானமாதலின், அத்வைதஞானமானது அவனால் உணரப் படமாட்டாது. ஞாதாவின் மோஹ நீக்கமானது சாஸ்திரத்தாலும் ஸத்குருவாலுந்தான் ஏற்படவேண்டும். மற்ற எதனாலும் ஏற்படாது.

**एतदेव हि विज्ञेयस्वरूपमभिधीयते ।**
**ज्ञातृज्ञानज्ञेयगतो यात्रद्धेदोऽत्रभासते ॥ ७२ ॥**

तावज्ज्ञाता ज्ञानमपि ज्ञेयं वा न भवेत्क्वचित् ।
यदा भेदो विगलितो ज्ञात्रादीनां मिथः स्थितः ॥ ७३ ॥
तदा ज्ञात्रादिसंपत्तिरेतदेव फलं स्मृतम् ।
ज्ञात्रादिफलपर्यन्तं न भेदो वस्तुतो भवेत् ॥ ७४ ॥
व्यवहारप्रसिद्ध्यर्थं भेदस्तत्र प्रकल्पितः ।
अतोऽपूर्वं लभ्यमत्र फलं नास्त्येव किंचन ॥ ७५ ॥

(இ—ள்) ஸங்கல்பவிகல்பங்களும், மூடத்தன்மையு மற்ற ஞானந்தான் ஒவ்வொருவராலும் உணரத்தக்கது. ஞாதா, ஞானம், ஞேயமென்னும் திரிபுடியின்பேதம் இருக்கும்வரை அவைகள் வாஸ்தவ (பாரமார்த்திக) வடிவ மாகா. திரிபுடியில் ஒன்றற்கொன்றுள்ள பரஸ்பரபேதம் எப்பொழுது நீங்குகின்றதோ, அப்பொழுதுதான் அவை ஐக்கியமாகி உண்மை வடிவத்தை யடைகின்றன.

ஞாத்ரு ஞான ஞேயங்கள் பேதமற்று ஏகரஸமாய் விளங்குவதே பலம் என்று கூறப்படுகிறது.

ஞாதா முதல் பலன் வரையில், அவற்றிற்குப் பரஸ் பரம் வாஸ்தவத்தில் பேதமே இல்லை. வியவஹாரமாத் திரத்திற்காக அவைகளிடம் பேதம் கற்பிக்கப்பட்டிருக் கிறது.

பேதம் கற்பிதமெனின், அபேதம் அல்லது அபயம் ஞாத்ரு ஞேயாதிகளின் உண்மை வடிவமென்றேற்படுகின் றது. ஆதலின் ஞாதாவுக்கு முன்னரே ஸித்தித்துள்ள அபயஸ்வரூபத்தை ஞானத்தின் பலனைக் கூறுவது கூடாது. ஞானத்தின் "பலன்" என்று கூறத்தக்கதாக ஒன்றுமே இல்லை.

(வி—ரை) ஜாக்கிரஸ்வப்னங்களில், அவற்றின் அபிமானிகளாகும் விஸ்வதைஜஸர்களின் ஞானத்தில் ஸங்கல்பவிகல்பங்களுண்டு. ஸுஷுப்தியில் அதன் அபிமானியாகும் பிராக்ஞன் அஞ்ஞானத்திஞல் ஆவரிக்கப்பட்டு இருப்பதால் அங்கே மூடத்தன்மையுண்டு. ஆதலின், ஜாக்கிரதாதி மூன்றவஸ்தைகட்கும் விலக்ஷணமான ஸ்வரூப ஞானந்தான் யாவராலும் நன்குணரத்தக்கதெனக் கூறப்பட்டது.

ஞாதா, ஞானம், ஞேயம் என்னும் த்ரிபுடியில், ஒன்றற்கொன்றுள்ள பரஸ்பர பேதம் உபாதியால் கற்பிக்கப்பட்டது. அந்தக்கரண உபாதியால் ஞாதாவென்றும், விருத்தியுபாதியால் ஞானமென்றும், விஷய உபாதியால் ஞேய மென்றும் கூறப்படும். எல்லா உபாதிகளாலும் உபஹிதமாயுள்ளது ஒரே சித்து தான். உபாதிகளின் நிரஸன (நீக்க) த்திஞல் சைதன்யத்திற்கு ஐக்கியமுண்டாகின்றது. இந்த ஐக்கியம் அகண்டமாகும். நிருபாதிக வடிவந்தான் அகண்டம். இந்த அகண்ட ஞானந்தான் பலன். "நான் அகண்ட ஞானத்தை யுணர்ந்தேன்" என்பதும் திரிபுடியே; ஆஞல் இது அகண்ட (சுத்த) த்திரிபுடி. நானென்பது மஹாஞாதா; அகண்டஞானம் மஹாஞேயம்; உணர்ந்தேன் என்பது மஹாஞானம். இந்த சுத்தத்திரிபுடியும் அகண்டஞானத்தில் கற்பிதமேயாகும்.

அசுத்த (அவித்யா)ப் பிரபஞ்ச வியவஹாரத்திற்காக அசுத்தத் திரிபுடியும், சுத்த (சின்மாத்ர) வித்தியாப் பிரபஞ்ச, மனன, நிதித்தியாஸன, ஸவிகல்ப ஸமாதி வியவஹாரத்திற்காக சுத்தத்திரிபுடியும் கற்பிக்கப்பட்டுள்ளன. இது மிகவும் ஸூக்ஷ்மமும் பரமரஹஸ்யமும் ஆகும்.

**आत्मैव मायया ज्ञातृज्ञानज्ञेयफलात्मना ।**
**यावद्भाति भवेत्तावत्संसारो ह्यचलोपमः ॥ ७६ ॥**
**यदा कथंचिदेतत्तु भायाद्भेदविवर्जितम् ।**
**संसारो विलयं यायाच्छिन्नाभ्रमिव वायुना ॥ ७७ ॥**

(இ—ள்) ஏகமாயும் அபயமாயுமுள்ள ஆத்மஸ்வரூபந்தான் கற்பிதமாயையால் அறிபவனென்றும், அறிவென்றும், அறியப்படு பொருளென்றும், பலனென்றும் தோன்றுகின்றது. இந்த பேதத்தோற்றம் எதுவரையில் விளங்குமோ, அதுவரை இந்த ஸம்ஸார பயமானது நீங்காமல் மலைபோல் அசையாமலிருக்கும்.

எப்பொழுது இவை எவ்விதமாகவேனும் பேதமின்றி ஏகரஸமாய் விளங்குமோ, அப்பொழுது ஸம்ஸார பயம் புயல் காற்றினல் சிதறடிக்கப்பட்ட மேகம் போல் நாசமாகின்றது.

(வி—ரை) பேதம் உண்மையானது என்னும் எண்ணத்தினல்தான் ஸர்வ அநர்த்தங்களும் உண்டாகின்றன.

"எவ்விதமாகவேனும்" என்று கூறுவதால் அவற்றின் பேத நீக்கம் மிகவும் சிரமப்பட்டு ஸாதிக்கவேண்டிய விஷயம் என்று ஏற்படுகின்றது. ஸ்ரீஸத்குருவின் உபதேசத்தினலாவது, அல்லது குருரூபிணியாகும் பரதேவதையின் பரிபூர்ண அநுக்கிரஹத்தினலாவது திரிபுடியின் பேத நீக்கம் ஏற்படவேண்டுமே தவிற மற்றெதனுலும் ஏற்படாது.

அவதாரிகை :—பரதேவதை இதுவரை ஞானத்தின் பயனை நிரூபித்து, இனி ஸாதனத்தை நிரூபிக்கின்றனள்.

एवंविधमहामोक्षे तत्परत्वं हि साधनम् ।
तत्परत्वे तु संपूर्णे नान्यत्साधनमिष्यते ॥ ७८ ॥

6. ஸாதனம்

(இ—ள்) இத்தகைய மஹாமோக்ஷத்திற்கு "அதை யடையவேண்டு" மென்னும் ஊக்கமே(தீவ்ரதரமுமுக்ஷுத் துவமே) சிறந்த ஸாதனமாம். ஊக்கம் பரிபூர்ணமாயிருந் தால் வேறு ஸாதனங்கள் எதுவும் வேண்டியதே இல்லை.

(வி—ரை) "श्रद्धा सर्वस्य कारणम्" சிரத்தைதான் எல் லாவற்றிற்குங் காரணம். மோக்ஷத்தை அடையவேண்டும் என்னும் சிரத்தையைத்தான் ஈண்டு தத்பரத்வம் என்று கூறப்படுகின்றது. எவ்விதமாகவேனும் இந்த ஸம்ஸார மாகும் துக்கக்கடலினின்றும் தாண்டி நித்தியாநந்த அபய ஸ்திதியை யடையவேண்டுமென்னும் தீவ்ரதர இச்சை தான் முமுக்ஷுத்துவமென்பது. இதில் சிரத்தையிருந் தால் தான், அதை (அபயஸ்திதியை) யடைவதில் ஊக்கம் இருக்கும். சிரத்தையின்றேல் எந்த இதர ஸாதனமும் பயனற்றதாகும்.

अपूर्णे तत्परत्वे तु किं सहस्रसुसाधनैः ।
तस्मात्तात्पर्यमेव स्यान्मुख्यं मोक्षस्य साधनम् ॥ ७९ ॥

तात्पर्यं सर्वथैतत्तु साधयामीति संस्थितिः ।
यस्तात्पर्येण संयुक्तः सर्वथा मुक्त एव सः ॥ ८० ॥

दिनैर्मासैर्वत्सरैर्वा मुक्तः स्याद्वान्यजन्मनि ।

(இ—ள்) ஊக்கம் திடமாயும் பரிபூர்ணமாயும் இல்லாவிடின் ஆயிரக்கணக்கான நல்ல ஸாதனங்கள் இருந்தும் என்னபயன்? ஆதலின் தத்பரதையென்னும் ஊக்கமே சிறந்த ஸாதனமாகும். தாத்பரியம் தத்பரதையென்பன ஒரு பொருட் சொற்கள்.

"எவ்வகை யாகவேனும் இதை ஸாதிப்பேன்" என்பது தான் ஊக்கத்தின் ஸ்வரூபம்.

எவனொருவன் இத்தகைய ஊக்கமுடையவனா யிருக்கிறானோ அவன் எப்படியாகிலும் முக்தியையடைகின்றான். அவனுடைய ஊக்கத்தின் திடத்திற்கும், அளவுக்கும் தக்கபடி அவன் சிலதினங்களிலாவது, சில மாதங்களிலாவது அல்லது சிலவருடங்களிலாவது அல்லது அடுத்த ஜன்மத்திலாவது முக்தனாகின்றான்.

(வி—ரை) ஒன்றையடைவதில் கால விளம்பத்தில் ஸஹிக்காத சித்தவிருத்தி விசேஷமே ஊக்கமாகும்.

**बुद्धिनैर्मल्यभेदेन चिरशीघ्रव्यवस्थितिः ॥ ८१ ॥**
**बुद्धौ तु बहवो दोषाः सन्ति सर्वार्थनाशनाः ।**
**यैर्जनाः सततं त्वेवं पच्यन्ते घोरसंसृतौ ॥ ८२ ॥**

(இ—ள்) சீக்கிரத்திலாவது நீடித்த காலத்திலாவது முக்தி யடைதலென்னும் விஷயம் முமுக்ஷுவின் புத்தி நைர்மல்விய (சுத்த) த்தைப் பொருத்தி யிருக்கிறது. புருஷார்த்தங்கள் எல்லாவற்றையும் நிறைவேறவொட்டாமல் தடுக்கக் கூடியதும், நாசஞ் செய்யக்கூடியதுமான வெகு தோஷங்கள் புத்தியில் இருக்கின்றன. இத்தோஷங்களால்

ஜீவர்கள் கோரமான ஸம்ஸாரமாகும் காட்டுத் தீயில் வெந்து வருந்துகின்றனர்.

(வி—ரை) யாதொரு தோஷமுமின்றிய சுத்தஸத்துவப் பிரதான புத்தியில்தான் அகண்டாகார விருத்தியுண்டாகும், இஃதுண்டானுல்தான், அசுத்தத் திரிபுடியின் பேதம் நசிக்கும்.

**विशुद्धबुद्धेः परमात्मवेदनम् । तेनैव संसारसमूलनाशः ॥**

என்னும் பிரமாணம் இங்கே அறியத்தக்கது. புத்தியில் தோஷங்கள் வாஸனு ரூபமாய் இருக்கின்றன. அவற்றின் ஸ்தூல ஸூக்ஷ்மத்திற்குத் தக்கபடி, அவற்றின் ஒழிவில், காலம் அபேக்ஷிக்கப்படுகின்றது.

**तत्राद्यः स्यादनाश्वासो द्वितीयः कामवासना ।**
**तृतीयो जाड्यता प्रोक्तास्त्रिधैवं दोषसंग्रहः ॥ ८३ ॥**

(இ—ள்) இவற்றுள் முதலாவது நம்பிக்கை யின்மை; இரண்டாவது காமவாஸனை; மூன்ருவது ஜாட்யதை யென்னும் மந்தபுத்தி. இங்ஙனம் புத்தி தோஷங்கள் மூவகைப்படும்.

(வி—ரை) அநாஶ்வாஸம் = நம்பிக்கை யின்மை. சாஸ்திரங்களில் பிரதிபாதிக்கப்படும் ஸித்தாந்தமான அர்த்தத்திலும், ஸத்குருவின் வாக்கியத்திலும் விஶ்வாஸமில்லாததே அநாஶ்வாஸமெனப்படும். இது எல்லாச் சாதனங்களையும் அடையவொட்டாமல் செய்யும். ஆதலின் பிரதிபந்தகங்களில் முதலாவதாகக் கூறப்பட்டது.

காமவாஸனை = விஷயங்களில் அபிலாஷை.

(வி—ரை) மோக்ஷம் உண்டா? இல்லையா? என்பவையோடு முக்தனுக்குப் புனராவ்ருத்தியுண்டா இல்லையா? மோக்ஷம் இந்த தேகத்திலா? அல்லது லோகாந்தரத்திலா? என்பன வாதியையும் ஸந்தேஹத்தில் சேர்த்துக்கொள்ளல் வேண்டும். சாஸ்திரார்த்தத்திற்கு முரணான தீர்மானத்திற்கு விபரீத மென்று பெயர்.

ஸம்சயம் என்பது இரண்டு பிரகாரமாக விளங்கும். இது ஸ்தாணுவா புருஷனா என்பது ஸம்சயவடிவம். ஸ்தாணுவென்பது உண்மை; இது புருஷனா என்னும் மற்றொரு பிரகாரத்திற்கு எதிர் மறையானது. இது கயிறு பாம்பா என்பது ஸந்தேஹம். ஆனால், கயிற்றைப் பார்த்து "இது பாம்பா, பூமாலையா" என்பது ஸம்சயத்தில் சேராது. இது அத்தியாஸத்தில் சேர்ந்ததாகும். ஸம்சயத்தில் ஒருகோடி உண்மையாயிருக்கும். உண்மையின் திட நிச்சய ஞான அநுஸந்தானத்தினால் விபர்யயம் நாசமாகும். ஒரு ஆட்டு மந்தையில் ஆடுகளோடு பழகியதோஷத்தினால் ஒரு புலிக்குட்டியானது தன்னை ஆடென்று நினைத்துக்கொண்டு நெடு நாளிருந்தது. புலியென்னும் எண்ணமே அதற்கில்லை. ஒருநாள் ஒரு புலி வந்தது. ஆடுகளெல்லாம் ஓடின. அப்போது புலிகுட்டியும் வந்த புலிக்குப் பயந்து ஓடிற்று. பெரும் புலியானது புலிக்குட்டியைப் பிடித்துக்கொண்டு 'நீயும் என்னைப் போல் ஒரு புலிதானே; ஏன் ஆடுகளைப் போல் ஓடுகிறாய்?' என்று வினவிற்று. 'நான் புலியன்று; ஆடுதான்' என்று அப்புலிக்குட்டி பதிலுரைத்தது. பின்னர், அப்பெரிய புலி அக்குட்டிக்குத் தான் புலியினத்தைச் சேர்ந்தது என்னும் உண்மையை உணர்த்திற்று. புலிக்குட்டியும் உண்மையை வுணர்ந்து "தான் ஆட்டுக் குட்டி" யென்னும் விபரீத எண்ணத்தை விட்டுவிட்டது.

ஜாட்யதை = சாஸ்திரங்களின் ஸூக்ஷ்மமான அர்த்தங்களைக் கிரஹிப்பதில் தடையாயுள்ள சித்தத்தின் தமோ குணாம்சம். மேற் கூறப்பட்ட மூன்று தோஷங்களும் முக்கியமானவை. இவையன்றி, ஆயிரக் கணக்கான இதர தோஷங்கள் புத்தியில் இருக்கின்றன.

ஸங்கிரஹமாக மூன்று தோஷங்கள் கூறப்பட்டன.

**द्विविधः स्यादनाश्वासः संशयश्च विपर्ययः ।**
**मोक्षोऽस्ति नास्ति वेत्याद्यः संशयः समुदाहृतः ॥८४॥**
**नास्त्येव मोक्ष इत्याद्यो भवेदत्र विपर्ययः ।**
**एतद्द्वयं तु तात्पर्ये मुख्यं स्यात्प्रतिबन्धकम् ॥ ८५ ॥**
**विपरीतनिश्चयेन नश्येदेतद्द्वयं क्रमात् ।**
**अत्रोपायो मुख्यतमो मूलच्छेदो न चापरः ॥ ८६ ॥**

(இ—ள்) அநாஶ்வாஸமென்னும் அவநம்பிக்கையானது ஸம்சயம், விபரீதம் என்னும் பாகுபாட்டால் இருவகைப்படும். மோக்ஷம் உண்டா? இல்லையா? வென்பன வாதிகள் ஸம்சயத்தின் ஸ்வரூபமாகும்; மோக்ஷம் இல்லவே இல்லை யென்பன வாதிகள் விபரீத வடிவினதாகும். ஸம்சயமும் விபரீதமும் மோக்ஷத்தைப்பற்றிய ஊக்கத்திற்கு முக்கியமான பிரதிபந்தகங்களாகும்.

ஸம்சய விபர்யயங்களுக்கு எதிர்மறையான உண்மையுணர்வினால் அவை நசிக்கின்றன. இதுதான், நம்பிக்கையின்மைக்கு மூலகாரணமான ஸம்சய விபர்யயங்களையொழிப்பதற்கு முக்கியமான உபாயமாகும்.

ஆதலின் விபரீத வுணர்ச்சியானது உண்மையின் நிச்சயத்தினால் அறவே ஒழிந்துவிடும் என்று கூறப்பட்டது.

अनाश्वासस्य मूलं तु विरुद्धतर्कचिन्तनम् ।
तत्परित्यज्य सत्तर्कावर्तनस्य प्रसाधने ॥ ८७ ॥
विपरीतो निश्चयः स्यान्मूलच्छेदनपूर्वकः ।
ततः श्रद्धासमुदयादनाश्वासः प्रणश्यति ॥ ८८ ॥
कामादिवासना बुद्धेः श्रवणे प्रतिबन्धिका ।
कामादिवासनाविष्टा बुद्धिर्नैव प्रवर्तते ॥ ८९ ॥

(இ—ள்) குதர்க்க எண்ணம் தான் நம்பிக்கை யின்மைக்கு மூல காரணமாகும். ஆதலின் குதர்க்கத்தை யொழித்து, அநுகூல தர்க்கத்தைக் கைக்கொண்டு அப்பியாசம் செய்தால் மூலகாரணம் வேரற்றுப் போவதுடன் அவநம்பிக்கைக்கு விரோதமான நிச்சயம் ஏற்படும். நிச்சயம் ஏற்பட்டால் சிரத்தை அதிகரிக்கும்; சிரத்தை யதிகரித்தால் அவநம்பிக்கைக்கு இடமே இல்லை. புத்தியிலுள்ள தோஷங்களில் இரண்டாவது காமாதி வாஸனைகள். இவை வேதாந்த சிரவணத்திற்குப் பிரதிபந்தகங்களாகும். காமாதிவாஸனைகள் அடர்ந்த புத்தியானது அத்தியாத்ம சாஸ்திராப்பியாஸத்தில் பிரவர்த்திக்காது.

(வி—ரை) நம்பிக்கையின்மை யென்பது ஸந்தேக விபர்யயங்களா லேற்படுகின்றதென்று முன் கூறப்பட்டதல்லவா? ஆதலின் நம்பிக்கையின்மைக்கு மூலகாரணம் ஸந்தேக விபரீதங்களேயாகும்; இவற்றை யொழிப்பதற்கு முக்கியமான உபாயம் விபரீதமும் நிச்சயமுந்தான்.

ஈண்டு விபரீதமாவது ஸந்தேஹத்திற்கு எதிர் மறையான ஸந்தேஹமின்மையேயாகும். விபரீதம் அல்லது விபர்யயமானது உண்மையின் நிச்சயத்திஞல் ஒழியும். ஆகையால் சாஸ்திரார்த்தத்திற்கு முரணான தர்க்கத்தை அறவே ஒழித்து அநுகூல தர்க்கத்தைக் கொண்டால் விபரீத எண்ணமும் போகும், ஸந்தேகமும் நீங்கும். இவையிரண்டும் ஒழியவே, அவநம்பிக்கை நசிக்கும், சிரத்தையதிகரிக்கும். அவநம்பிக்கை யிருக்கும் வரை சிரத்தை யேற்படாது.

**सत्तर्कावर्तनस्य प्रसाधनम्**—சாஸ்திரார்த்தத்தில் நம்பிக்கை யேற்படுவதற்கு அநுகூலமான தர்க்கத்தை அடிக்கடி மனத்தில் மனனம் செய்து அப்பியஸிப்பது. இது மானஸ வியாபாரமாகும்.

விஷய வாஸனைகளே காமாதிவாஸனைகள். இவை புத்தியில் குடிகொண்டிருந்தால், ஸத்குருவால் உபதேசிக்கப்பட்ட ஸூக்ஷ்மமான அர்த்தத்தில் புத்தி பிரவர்த்திக்கவே பிரவர்திக்காது. அங்ஙனம் பிரவர்த்தித்தாலும் அந்த ரஹஸ்யமான அர்த்தத்தைக் கிரஹிக்கவும் கிரஹிக்காது.

**लोकेऽपि कामी काम्यस्य सदा ध्यानैकतत्परः ।**
**पुरःस्थितं न पश्येच्च श्रोत्रोक्तं शृणुयान्न च ॥ ९० ॥**

(இ—ள்) உலகத்தில் காமியானவன் தான் விரும்பிய காமியத்தையே ஸதா நினைத்துக்கொண்டு தத்பரனுய் இருப்பான். ஆதலின், அவனுக்கு எதிரிலுள்ள பொருளும் தோன்ருது, காதில், சொன்னசொற்களும் நுழையா.

(வி—ரை) காமாதி விஷய வாஸனைகள் அடர்ந்த புத்தியையுடைய காமியால் விரும்பப்படுபவை ஸ்திரீ,

தனம் முதலியவையே யாகும். காமியின் மனம் ஸதா, தான் விரும்பிய பொருளையே நினைத்துக்கொண்டு அதில் ஏகாக்கிரதையோடிருப்பதால் பாஹ்யமான கண், காது முதலிய ஞானேந்திரியங்களால் உணர்வே வுண்டாகாது. கண் பார்த்தாலும் பார்க்காததற்குச் சமானமே; காது கேட்டாலும் கேளாததற்குச் சமானமே. ஆதலாற்றான் காமாதிவிஷய வாஸனைகளோடு கூடிய புத்தி வேதாந்த சிரவணம் செய்வதற்கு உரியதாகாதென்று கூறப்பட்டது.

कामादिवासितस्यैवं श्रुतं चाश्रुतसंमितम् ।
कामादिवासनां तस्माज्जयेद्वैराग्यसंपदा ॥ ९१ ॥

(இ—ள்) ஆகையால் காமாதி துர்வாஸனைகள் குடிகொண்ட அந்தக்கரணத்தை யுடையவன் சிரவணித்த வேதாந்த அர்த்தம் கேளாததற்குச் சமானமே யாகும். ஆகையால் வைராக்கியத்தின் வலிவால் காமாதி துர்வாஸனைகளை ஜயிக்கவேண்டும்.

(வி—ரை) ஈண்டு, புத்தி தோஷமாகிய துர்வாஸனைகளை யொழிப்பதற்கு உபாயம் வைராக்கியந்தான் என்று கூறப்பட்டது.

வைராக்கியமென்பது, விஷயங்களில் இச்சையின்மையும், விஷயங்களைத் தியாகம் செய்யவேண்டும் என்னும் இச்சையுமாகும். வைராக்கியத்தின் அடைவிற்கு விஷயங்களிலுள்ள தோஷ திருஷ்டியே காரணமாம், இவ்வுலகம் முதல் பிரஹ்மலோகபரியந்தமாகிய ஸகலலோகங்களின் போகத்தையும் பிரமாண யுக்திகளால் அநித்திய மெனவுணர்ந்து, போகேச்சையைச் சித்தத்தினின்றும் நீக்குதல்

வைராக்கியமாமென்று பெரியோர் கூறுவர். வைராக்கியமின்றேல் உபரதியில்லை. உபரதியாவது பாஹ்ய விஷயங்களிலிருந்து மனத்தையும், இந்திரியங்களையும் திருப்புதலேயாகும். முற்பழக்கத்தால் மனமும், கண் காது முதலிய இந்திரியங்களும் விஷயங்களை நாடும். அங்ஙனம் நாடும் மனத்தையும், இந்திரியங்களையும் அடிக்கடி வைராக்கிய விருத்தியால் தடுத்தால் அவற்றிற்கு விஷயங்களிற் பாயும் பழக்கம் அற்றுவிடும். விடவே காமாதி துர்வாஸனைகள் ஒழியும்.

(அ—கை) துர்வாஸனைகட்கெல்லாம் காமமே முக்கியமெனக் கூறப்படுகின்றது.

**सन्ति कामक्रोधमुखा वासनास्तु सहस्रशः ।**
**तत्र कामो मूलभूतस्तन्नाशे न हि किंचन ॥ ९२ ॥**

(இ—ள்) காமம், குரோதம் முதலிய ஆயிரக்கணக்கான துர்வாஸனைகள் சித்தத்தில் இருக்கின்றன. அவற்றுள் காமமே பிரதானமாகும். காமவாஸனை நசிக்கின் மற்றவை தாமாகவே நசிக்கும்.

(வி—ரை) காமம் = விஷய இச்சை, குரோதம் = "இவன் எனக்கு அபகாரி (விரோதி); ஆதலின் இவன் எப்படியாவது கொல்லத்தக்கவன்" என்னும் சித்தவ்ருத்தியாகும். காமம், குரோதம், லோபம், மோஹம், தம்பம், தர்ப்பம், ஈர்ஷை, அஸூயை முதலியன உத்பத்தியாதற்கு நிமித்தமான ஸம்ஸ்காரங்கள் சித்தத்தில் ஸூக்ஷ்மமான வாஸனாரூபமாய் இருக்கின்றன. இவற்றிற்கெல்லாம் காமம்

தான் மூலகாரண மெனக் கூறப்பட்டது. காமவாஸனை நசிக்கின் மற்றெல்லா வாஸனைகளும் நசிக்கும்.

ततो वैराग्यसंयोगान्नाशयेत्कामवासनाम् ।
आशा हि कामः संप्रोक्त एतन्मे स्यादिति स्थिता ॥ ९३ ॥

(இ—ள்) ஆகையால் வைராக்கியத்தை நன்கடைந்து அதனால், காமவாஸனையை நசிப்பிக்கவேண்டும். "இது எனக்கு வேண்டும்" என்னும் ஆசைக்குத்தான் காமம் என்று பெயர்.

शक्येषु स्थूलभूता सा सूक्ष्माऽशक्येषु संस्थिता ।
दृढवैराग्ययोगेन सर्वां तां प्रविनाशयेत् ॥ ९४ ॥

(இ—ள்) தன்னால் ஸாதித்து அடையக்கூடிய தனம், ஸ்திரீ முதலிய விஷயங்களில் இந்த ஆசை ஸ்தூலமாயும், அஸாத்திய விஷயங்களில் (இந்த பிரஹ்மாண்டம் முழுவதும் நான் ஆளவேண்டுமென்பன வாதிகளில்) ஸூக்ஷ்மமாயும் இருக்கின்றது. ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள ஆசையைத் திட வைராக்கியத்தால் நன்கு நசிப்பிக்கச் செய்தல்வேண்டும்.

(வி—ரை) திடவைராக்கியமென்பது தீவிரதர வைராக்கியமாகும். வைராக்கியமானது, மந்தம், வியதிரேகம், ஏகேந்திரியம், தீவிரதரம் என்னும் நான்கு பாகுபாடுகளையுடையது. தீவிரதரமே திடவைராக்கிய மெனப்படும்.

ஸ்திரீ, தனம் முதலிய போக்கிய விஷயங்களிலுள்ள அநித்தியத்துவம், அவை நசித்துவிடுமோ என்னும் பயம்,

அவற்றின் நாசத்தினால் துக்கமுண்டாதல் முதலியன அவற்றின் (விஷய) தோஷங்களாம். விஷயங்களிலுள்ள மேற்கூறிய தோஷங்களை யுணர்ந்து, அவற்றை விடுவது தீவிரதர (திட) வைராக்கிய மெனப்படும்.

**तत्र मूलं काम्यदोषपरामर्शः प्रतिक्षणम् ।**
**वैमुख्यं विषयेभ्यश्च वासना नाशयेदिति ॥ ९५ ॥**

(இ—ள்) வைராக்கிய அடைவிற்குக் காரணமானது காமியவிஷயங்களிலுள்ள தோஷங்களை அடிக்கடி ஒவ்வொரு க்ஷணமும் பராமர்சம் செய்வதேயாகும். விஷயங்களிற் பாய்ந்தோடும் மனம் அவற்றினின்றும் திரும்புதலால் காமவாஸனை நசிக்கின்றது.

(வி—ரை) விஷயங்களிலுள்ள தோஷங்கள் முன் சுலோகத்தில், விசேஷவுரையில் கூறப்பட்ட அநித்தியத்துவம், பயம், துக்கம் முதலியவைகள். இங்ஙனம் விஷயங்களில் தோஷதிருஷ்டியைப் பிரதிக்ஷணமும் விமர்சம் செய்து மனத்தையும் இந்திரியங்களையும் அவற்றினின்றும் திருப்பி, விமுகனாயிருப்பது திடவைராக்கியமாகும். இதனால் காமாதி துர்வாஸனைகள் நசித்துவிடும்.

(அ—கை) புத்தி தோஷங்களுள் மூன்றாவதான ஜாட்டியம் (மந்தத்தன்மையைப்பற்றி இனி) கூறப்படுகின்றது.

**यस्तृतीयो बुद्धिदोषो जाड्यरूपो व्यवस्थितः ।**
**असाध्यः सोऽभ्यासमुखैः सर्वथा ऋषिसत्तमाः ॥ ९६ ॥**
**येन तात्पर्यतश्चापि श्रुतं बुद्धिमनारुहेत् ।**
**तज्जाड्यं हि महान्दोषः पुरुषार्थविनाशनः ॥ ९७ ॥**

(இ—ள்) ஓ ரிஷிகளே! மூன்றாவதாகக் கூறப்பட்ட ஜாட்டியமாகும் புத்தி தோஷமானது வைராக்கிய, அப்பியாஸாதிகளால் எப்பொழுதும் வர்த்திக்கத் தக்கதன்று.

ஒருவனுக்கு, எதனால், ஊக்கமிருப்பினும் சிரவணஞ் செய்தவிஷயம் புத்தியில் ஏறாதோ அத்தகைய ஜாட்டிய தோஷம் புருஷார்த்தத்தை நாசஞ் செய்யக்கூடியவன்மை பொருந்திய பெரிய தோஷமாகும்.

(வி—ரை) ஜடத்தன்மையானது ஒருவன் பூர்வ ஜன்மங்களிற் செய்த துஷ்கர்மாக்களின் தமோகுணத்தின் பிராசுர்யத்தினால் ஏற்பட்டதாகும். அப்பியாஸ, வைராக்கியாதிகளால் இந்த தோஷம் நிவர்த்தியாகாது. ஏனெனின் மந்த புத்தியுள்ளவனுக்கு எந்தஸாதனமும் கிரமமாய், அப்பியஸிக்கமுடியாது என்பது கருத்து.

**तत्रात्मदेवतासेवामृते नान्यद्धि कारणम् ।**
**सेवायास्तारतम्येन जाड्यं तस्य हराम्यहम् ॥ ९८ ॥**

(இ—ள்) இந்த மஹாதோஷத்தை நிவர்த்திக்க ஆத்மதேவதையாகும் என்னை யுண்மையாய்ச் சேவிப்பதன்றி வேறு ஸாதனமில்லை. அவரவர்கள் செய்யும் ஜபம், தியானம், பூஜை முதலியவைகளின் தாரதம்மியத்திற்குத் தக்கவாறு அவரவர்களின் புத்திஜாட்டியத்தை நானே நிவர்த்தி செய்கிறேன்.

(வி—ரை) ஜாட்டியம் என்பது ஜடத்தன்மையாகும். புத்தியென்பது அந்தக்கரணத்தின் ஒரு அம்சம். அந்தக்கரணம் பஞ்ச பூதங்களின் ஸத்வாம்சத்தின் ஸமஷ்டிவடிவ

மாகும். அவற்றுள் புத்தி தேஜஸ்(அக்னி)வின் ஸத்வாம்சம். அதில் சைதன்யம் நன்கு பிரதிபலித்தல் ஸஹஜமே. ஆயினும், அதிலுள்ள தோஷத்தால் தமோகுணம் ஏறி ஜடமாயிற்று. புத்தி அதிஷ்டானமாயுள்ள ஸாக்ஷியாகும் சித்சக்தியின் உபாஸனையால்தான் ஜடத்துவதோஷம் நிவர்த்தியாகும். ஆத்மதேவதையே சித்சக்தியாகும் பர தேவதை. உபாஸனையென்பது மந்த்ரம் அல்லது பிரஹ்ம வித்தை—தியானம்,—பூஜை முதலியவைகளாம்.

**जाड्यालपानल्पभावेन सद्यो वा परजन्मनि ।**
**भवेत्तस्य फलप्राप्तिर्जाड्यसंयुक्तचेतसः ॥ ९९ ॥**

(இ—ள்) ஜாட்டிய தோஷத்தின் மிகுதிக் குறைவுகளால் புத்திதோஷமுடைய உபாஸகர்களுக்கு அப்பொழுதேயோ அல்லது, அடுத்த ஜன்மத்திலேயோ பலம் ஏற்படுகின்றது.

(வி-ரை) ஜாட்டியம் அற்பமாயும் ஸேவை அதிகமாயும் இருந்தால் தக்ஷணமே முக்தியடைகிறான்; ஜாட்டியம் அற்பமாயும் ஸேவையும் அற்பமாயும் இருந்தால் நெடுநாளில் முக்தியடைவான். ஜாட்டியம் அதிகமாயும் ஸேவை அற்பமாயும் இருந்தால் அடுத்த ஜன்மத்திலாவது முக்தியடைவான். ஆதலின், புத்தி தோஷமாகும் ஜடத்தன்மையின் நாசம் பரதேவதாராதனத்தினாலே தான் ஏற்படவேண்டும்.

**सर्वसाधनसंपत्तिर्ममैव प्रणिधानतः ।**
**उपायाति च यो भक्त्या सर्वदा मामकैतवात् ॥ १०० ॥**
**स साधनप्रत्यनीकं विधूयाशु कृती भवेत् ।**

(இ-ள்) என்னை யுபாஸிப்பதனுல் தான், ஸத்ஸங்கம், தத்பரதை, வாஸனுக்ஷயம் முதலிய எல்லாஸாதனங்களும் தாமாகவே உண்டாகின்றன. கபடமின்றிய இத்தகைய உண்மை உபாஸகன் ஸாதனங்களின் விக்கினங்களை யொழித்து அப்பொழுதே கிருத கிருத்தியனுகின்ருன்.

(வி—ரை) புத்தி தோஷமான ஜாட்டிய நிவர்த்தியில் பரதேவதாராதனம் முக்கிய காரணமா மென்று கூறி, ஜாட்டிய தோஷமற்றவர்களுக்கும் கூட ஸ்ரீ வித்யோபாஸனை அத்தியாவசியமாகும் என்று கூறப்பட்டது. பரதேவதோபாஸ்தியினுல் விவேகம், ஸத்ஸங்கம், வைராக்கியம், சமம், தமம், சிரத்தை, ஸமாதானம், உபரதி, திதிக்ஷை, தத்பரதை, வாஸனுக்ஷயம் முதலிய ஸகல ஸாதனங்களும் ஏற்படுகின்றன. ஸ்ரீ வித்யோபாஸகனை (முக்தியின் அடைவிற்கு அத்தியாவசியமான) எல்லாச் சாதனங்களும் தாமே வந்தடைகின்றனவென்பது சிதையாத ஸித்தாந்தமாகும். உபாஸனை, நிஷ்கபடமாயும் ஸத்ஸம்பிரதாய ஸித்தமாயும் இருத்தல் அவசியம். இவற்ருேடு நிஷ்காமனையோடும் இருத்தல் வேண்டும்.

**यस्तु मामीश्वरीं सर्वबुद्धिप्रसरकारिणीम् ॥ १०१ ॥**
**अनादृत्य साधनैकपरः स्यान्मूढभावतः ।**
**पदे पदे विहन्येत फलं प्राप्येत वा न वा ॥ १०२ ॥**

(இ—ள்) எவனெருவன், எல்லோருடைய புத்தி வ்ருத்திகளைப் பிரேரணை செய்பவளும், ஈஸ்வரியுமான என்னை அநாதரவு செய்து ஸாதனைகளில் மாத்திரம் தத்பரனுய் இருக்கிருனே அவன் அடிக்கடி விக்கினங்களால்

வருந்துவதுடன், அச்சாதனங்களின் பயனை யடைவதும் ஸந்தேகமே.

(வி—ரை) பரதேவதை எல்லோருடைய புத்திகளிலும் ஸாக்ஷியாய் விளங்கி அந்த அந்த புத்திகளை ஸன்மார்க்கத்தில் செல்லும்படி பிரேரணை செய்கிறாள். ஈச்வரி யாதலின் நியாமிகையும் அவளே. இத்தகைய பரதேவதையை உபகமனம் செய்து உபாஸனை செய்யாதவன் மூடனே யாவன். மௌட்டிய சித்தத்தில் எந்த உத்தமமான ஸாதனமும் பயன் பெறாது.

तस्मात्तु ऋषयो मुख्यं तात्पर्यं साधनं भवेत् ।
एवं तात्पार्यवानेव साधकः परमः स्मृतः ॥ १०३ ॥

(இ—ள்) ஆதலின், ஓரிஷிகளே! என்னுடைய உபாஸனையோடு கூடிய ஊக்கமே (மோக்ஷத்திற்கு) முக்கிய ஸாதனமாகும். ஆதலின் தத்பரதையோடுகூடிய வித்யோபாஸகனே சிறந்த ஸாதகனென்று கருதப்படுவான்.

(வி—ரை) இதோடு ஸாதன நிரூபணம் உபஸம்ஹாரம் செய்யப்படுகின்றது. மோக்ஷத்திற்குச் சிறந்த ஸாதனமென்று கூறப்பட்ட தத்பரதை (ஊக்கத்திற்)க்குப் பிரதிபந்தங்களாயுள்ள நம்பிக்கையின்மை, காமாதி துர்வாஸனைகள், ஜாட்டியம் முதலியன நசிக்கவேண்டும். பிரதிபந்தங்களற்ற தத்பரதையும், பராதேவதையின் உபாஸ்தியுமே தான் சிறந்த ஸாதனங்களென்றேற்படுகின்றன.

(அ—கை) இதுகாறும் மோக்ஷத்திற்குச் சிறந்த ஸாதனங்களைக் கூறி, இதில் ஸாதக நிரூபணம் செய்யப்படுகின்றது.

तत्र मद्भक्तियुक्तस्तु साधकः सर्वपूजितः ।
सिद्धिरात्मव्यवसितिर्देहानात्मत्वभावना ॥ १०४ ॥

## 7. ஸாதக நிரூபணம்

(இ—ள்) தத்தபரதையும், என்னிடம் பரமபக்தியு முடையவனே யாவராலும் பூஜிக்கத்தக்க சிறந்த ஸாதகனுவான்; இவனே ஸாதகோத்தமன்.

(வி—ரை) "எப்படியாகிலும் இந்த ஜன்மாவில் முக்தி யடையவேண்டும்; ஆதலின் அதற்கு அத்தியாவசியமான ஸாதனங்களை யெல்லாம் ஸாதிக்கவேண்டும்." என்னும் தத்பரதையும், அது ஸபலமாதற்குப் பராதேவதையின் அநுக்கிரஹமுமுள்ள ஸாதகனே சிறந்தவனுவன். ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना । என்பது பிரமாணம்.

## 8. ஸித்தியின் நிரூபணம்

(இ—ள்) ஸித்தியென்பது, உண்மையான ஆத்மஸ்வரூப நிச்சயமும், தேஹாதிகளில் அநாத்ம பாவனையுமேயாகும்.

(வி—ரை) சுத்தமான ஆத்மஸ்வரூப நிச்சயத்தினல் தேகம், பிராணன், மனம், புத்தி முதலியவற்றில் கற்பிதமான ஆத்மாத்தியாஸம் நீங்குகின்றது. தேகாதிகள் அதத்வியாவிருத்தியால் ஆத்மாவன்றென்று முன்னரே நீக்கப்பட்டன வாதலின். ஆதலின் சித்சக்திக்கு அபின்னமான சுத்தாத்ம நிச்சயமே மேலான ஸித்தியாமென்பது ஈண்டு நிரூபணம் செய்யப்பட்டது.

**आत्मत्वभावनं नूनं शरीरादिषु संस्थितम् ।
तदभावनमात्रं तु सिद्धिर्मौढ्यविवर्जितम् ॥ १०५ ॥**

(இ—ள்) எல்லாருக்கும் சரீராதிகளில் ஸந்தேஹ மின்றிய ஆத்மபாவம் இருக்கிறது. அநாத்மாக்களாகிய சரீராதிகளில் ஆத்மபாவம் ஒழிவதே மூடத்தன்மையற்ற ஸித்தியெனப்படும்.

(வி—ரை) முன்னர் கூறப்பட்ட விஷயமே இங்கும் விமர்சிக்கப்படுகின்றது. "ஸித்தியென்பது ஸாதனங் களால் பெறப்படுவது" என்பது உபசாரமாம். ஆத்ம ஸ்வரூபம் எப்பொழுதும் ஸித்தித்திருப்பது. தேகாதி களில் ஆத்மபுத்தியானது அவித்தையால் அநாதியாய் ஏற்பட்டு அனேககோடி ஜன்மங்களாகத் தொடர்ந்து வந்திருக்கின்றது. தேஹாதிகளில் ஆத்மபாவனையை யொழிக்க விசாரம் அவசியம் வேண்டும்.

ஸுஷுப்தியில் தேஹாதிகளில் ஆத்மபாவனையில்லை. ஆதலின் ஸுஷுப்தியே ஸித்தியென்று கூறலாமே எனின், ஸுஷுப்தி மூடத்தன்மையோடு கூடியது. ஆத லின் உண்மையான ஆத்மஸித்தி மூடத்தன்மை (அஞ்ஞா னம்) அற்றது என்று கூறப்பட்டது.

**आत्मा व्यवसितः सर्वैरपि नो केवलात्मना ।
अत एव तु संप्राप्ता महानर्थपरम्परा ॥ १०६ ॥**

(இ—ள்) ஆத்மா, ஆத்மா என்று எல்லாரும் சொல் லிக்கொள்ளுகிறார்கள். தேஹாதிகளில் ஆத்மபாவனையைச் செய்கிறார்கள். கேவல ஆத்மஸ்வரூபத்தின் உண்மையான

ஸ்திதியை ஒருவரும் உணருவதில்லை. ஆகையால் தான் அக்ஞர்கள் யாவரும் மஹா அநர்த்தங்களின் தொடர்பிற் சிக்கிக்கொண்டு வருந்துகிறார்கள்.

(வி—ரை) அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆநந்தமயம் என்னும் பஞ்சகோசங்களை யும் சாஸ்திரங்களிற் கூறப்பட்ட ஆத்ம லக்ஷணத்தைக் கொண்டு விவேசனம் செய்து பஞ்சகோசங்களும் ஆத்மா வல்லவென்று நிச்சயம் செய்யவேண்டும். இங்ஙனம் பன் முறை விவேசனம் செய்யின் அவற்றில் ஆத்மபுத்தி குறை யும், பஞ்சகோசங்களில் ஆத்ம பிராந்தி குறையக்குறைய கேவலமான ஆத்மஸ்வரூபம் கொஞ்சம் கொஞ்சம் புலப் படும். அநாத்மாக்களில் ஆத்மபுத்தியிருப்பதால் தான் ஸகல அநர்த்தங்களும் ஏற்படுகின்றன. ஸகல அநர்த்தங் களுக்கும் காரணமான ஜனன மரணப்பிரவாஹமே மஹா அநர்த்த பரம்பரையாகும். இத்தகைய மஹா அநர்த்த பரம்பரை கேவலாத்ம ஞானத்தினாலேதான் நாசமாகும். "तरति शोकमात्मवित्" என்பது இதற்குப் பிரமாணமாம்.

**तस्मात्केवलचिन्मात्रं यद्देहाद्यवभासकम् ।**
**तन्मात्रात्मव्यवसितिः सर्वसंशयनाशिनी ॥ १०७ ॥**
**सिद्धिरित्युच्यते प्राज्ञैर्नातः सिद्धिरनन्तरा ।**
**सिद्धयः खेचरत्वाद्या अणिमाद्यास्तथैव च ॥ १०८ ॥**
**आत्मविज्ञानसिद्धेस्तु कलां नार्हन्ति षोडशीम् ।**
**ताः सर्वास्तु परिच्छिन्नाः सिद्धयो देशकालतः ॥१०९॥**
**इयं स्यादपरिच्छिन्ना स्वात्मविद्या शिवात्मिका ।**
**स्वात्मविद्यासाधनेषु ताः सर्वाः सुप्रतिष्ठिताः ॥ ११० ॥**

(இ—ள்) ஆகையால் தேஹாதிகளைப் பிரகாசிப்பிக்கின்றதாயும், இரண்டாவதற்றதாயும், எல்லாச் சந்தேகங்களையும் நாசம் செய்வதாயும், தான் மாத்திரமாய், ஒன்றோடுங்கலவாது சுத்தமாயுள்ளதுமான ஆத்மஸ்வரூபத்தையுணர்ந்து அந்நிலையில் நிற்பதே மேலான ஸித்தியென்று பெரியோர் கூறுவர். இதைத் தவிற வேறுஸித்திகள் இல்லை. ஆகாசகமனம், அணிமாதி ஸித்திகள், பரகாயப் பிரவேசம் முதலிய ஸித்திகள் கேவல ஆத்ம விக்ஞான ஸித்தியில் ஒரு கலை (பதினாறிலொன்று)க்கு நிகராகாது. ஞானஸித்திக்கு வேறான இதர (அநாத்ம ஜட) ஸித்திகளெல்லாம் தேசகாலாதிகளால் பரிச்சின்னப்பட்டவையேயாகும்.

ஸர்வமங்கள ஸ்வரூபமான இந்த ஆத்மவித்தை அபரிச்சின்னமானது. பரிச்சின்ன ஸித்திகளெல்லாம் ஸ்வாத்மவித்யா ஸாதனங்களிலேயே பிரதிஷ்டிதமாய் இருக்கின்றன.

(வி—ரை) ஆத்மா சித்ஸ்வரூபமானது. சித்து இதரப் பிரகாசத்தை யபேக்ஷிக்காமல் தானே ஸ்வயம்பிரகாசமாய் விளங்கி, பிரகாசமற்ற ஜடப் பொருள்களை யெல்லாம் பிரகாசிப்பிக்கின்றது.

ஆத்மா அஸங்கம்; கற்பித அநாத்மப் பொருள்களோடு சேராதது; ஆதலின் கேவலம்.

ஆத்மா ஞானஸ்வரூபம்; ஆதலின், அக்ஞானத்தின் காரியங்களான ஸந்தேஹம், விபரீதம், ஆவரணம் முதலியவை ஆத்மஸ்வரூபத்தில் இல்லை. கற்பிதமான இவைகள் நாசமானால் தான் ஆத்மஸ்வரூபம் விளங்கும். ஆதலின் “ ஸர்வஸம்சயநாசினி ” என்று கூறப்பட்டது.

அணிமாதி ஸித்திகள் அஞ்ஞான காரியமாகும் பிரபஞ்சத்தில் தோன்றுவன. இவை நாசத்தோடுகூடியன. என்றும் ஸித்தமாய், அவிநாசியாய் இருப்பதுதான் ஸித்தி யெனப்படும்; மற்றவை புதிதாய் உண்டாகி, நாசமாகுந்தன்மையன. அவற்றைச் சித்திகளென்று கூறுவது உபசாரமேயாகும். உண்டாகி நாசமாவன வெல்லாம் காலத்தினுல் பரிச்சின்னப் பட்டவை; உபலக்ஷணமாய் தேச பரிச்சேதத்தையும், வஸ்து பரிச்சேதத்தையும் கொள்ளல் வேண்டும். இந்த பரிச்சின்ன ஸித்திகள் யாவும் அபரிச்சின்ன வடிவ ஆத்மஞான ஸித்தியின் பாஹ்ய ஸாதனங்களாகும் ஏகாக்கிரம், பிராணுயாமம், ஆஸனம், தாரணை, மந்த்ரஜபம் முதலியவற்ருல் ஏற்படக் கூடியவையே யாகும்.

आत्मविद्याविधावेतास्त्वन्तरायप्रयोजकाः ।
किं ताभिरिन्द्रजालात्मसिद्धितुल्याभिरीहितम् ॥१११॥
यस्य साक्षाद्ब्रह्मपदमपि स्यात्तृणसंमितम् ।
कियन्त्येताः सिद्धयो वै कालक्षपणहेतवः ॥ ११२ ॥
तस्मात्सिद्धिर्नेतरा स्यादात्मविज्ञानसिद्धितः ।
ययात्यन्तशोकनाशो भवेदानन्दसान्द्रता ॥ ११३ ॥
सैव सिद्धिर्नेतरा तु मृत्युग्रासविमोचिनी ।

(இ—ள்) அநாத்மஸித்திகள் யாவும் ஆத்மவித்தையின் ஸித்திக்கு இடையூறுகளேயாகும். ஸாக்ஷாத் பிரஹ்ம பதவியையும் ஒறு சிறு துரும்புக்கு நிகராக நினைக்கும் தீவிரதர முமுக்ஷுக்களுக்கு, இந்திரஜாலம் போன்ற இந்த அநாத்ம ஸித்திகளால் யாது பயன்? வீணுய் காலங்கழி

வதே பயன். ஆகையால் யாதொன்றினுல், சோகத்தின் ஆத்தியந்திக நாசமும், மிருத்யு பயத்தினின்று நீக்கமும், ஏகரஸாநந்த ஸ்வரூப ஸ்திதியும் உண்டாகின்றனவோ அதுவே ஆத்மஸித்தியாகும். மற்றவை உண்மையான ஸித்தியாகாது.

(வி—ரை) ஆகாசகமனம், அணிமாதி, பரகாயப் பிரவேசம், ஹேமஸித்தி, ஜலஸ்தம்பனம், வாயுஸ்தம் பனம், அக்னிஸ்தம்பனம், அஞ்ஜனஸித்தி, குடிகாஸித்தி முதலிய எண்ணிறந்த ஸித்திகள் இந்திரஜாலம் போல் மித்தியா வடிவினவாயிருக்கின்றன; ஆதலின் இம்மித்யா பிரபஞ்ச ஸம்பந்தமானவை.

தீவிரதர முமுக்ஷுவிற்கு நாமரூப திருஷ்டியே விரோதியாகுமெனின், நாமரூபவடிவ பிரபஞ்சத்தோடு கலந்துசெய்யும், ஒரு முகப்பட்ட (அசுத்த) மனத்தின் வியாபாரத்தினுடைய பயனுகும் ஸித்திகள் ஆத்மவித் தைக்கு ஸாக்ஷாத் விரோதிகளென்று சொல்லவும் வேண் டுமா? தீவிரமுமுக்ஷுக்கள் பிரஹ்மலோகத்தையுங் கூட இச்சிப்பதில்லையெனின் இந்த மித்தியா ஸித்திகளையா இச்சிப்பார்?

**मृत्युग्रासविमोचिनी** = காலதேவதைக்கு ஆஹாரமாகுந் தன்மையை நாசம் செய்வது. மிருத்யு=மரணம். எதற்கு மரணமுண்டோ அதற்கு ஜனனம் அவசியம் உண்டு. ஸ்தூல தேகத்திற்குத்தான் ஜனனமும் மரணமும்; தான் ஸ்தூலமாகிய தேஹமல்லவென்றும், தன் (உண்மையான ஆத்ம) ஸ்வரூபத்திற்கு ஜனனமும் இல்லை மரணமும் இல்லையென்றும் திடமாய் வுணர்வதன்றோ ஆத்மவித் தைக்கு முதற்படி.

**इयमात्मज्ञानसिद्धिर्विविधाभ्यासभेदतः ॥ ११४ ॥**
**बुद्धिनैर्मल्यभेदाच्च परिपाकविभेदतः ।**
**संक्षेपतस्तु त्रिविधा चोत्तमा मध्यमाधमा ॥ ११५ ॥**

(இ—ள்) இந்த ஆத்மஞான ஸித்தியும் அப்பியாஸ பேதத்தினுல் பலவகைப்படும்.

புத்தியினது நிர்மலத் தன்மையின் ஏற்றக்குறைவினுலும், ஞான பரிபாக பேதத்தினுலும் சுருக்கமாய் உத்தமம், மத்திமம், அதமம் என மூவகைப்படும்.

(வி—ரை) "பஞ்சகோச விலக்ஷணமாயும், அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயுமுள்ள கேவல சின்மாத்திர ஆத்மஸ்வரூபமே நான்" என்று ஸந்தேஹமின்றி அபரோக்ஷமாயுணர்வது தான் உத்தமமான ஞானஸித்தி. இது ஏற்படவேண்டுமாயின் "स तु दीर्घकालनैरन्तर्यसत्कारसेवितया दृढभूमिः" என்னும் யோகஸூத்திரப் பிரமாணத்தின்படி, நெடுநாள் இடைவிடாத விச்வாஸத்தோடு அப்பியாஸம் செய்தால் தான் திடமான ஆத்மஸித்தி ஏற்படும். இங்ஙனம் அப்பியாஸம் செய்வதற்கு நிர்மலமான புத்தி வேண்டும். புத்தியில் அல்பதோஷம் இருந்தாலும் ஆத்மஸித்தி ஏற்படாது. இதோடு பரிபாகமும் வேண்டும். பரிபாகம், ஞானத்திற்குக் கூறுதல் அஸம்பவம். ஏனெனின் பரிபாகமென்பது விகாரத்தின் ஒரு அவஸ்தை. நிர்விகாரஞானத்திற்குப் பரிபாகமென்கிற ஓரவஸ்தையைக் கூறுதல் சாஸ்திர விருத்தமாகும். ஆதலின் பரிபாகம் புத்திக்கேயாகும். புத்தியில் ரஜோகுண தமோகுணங்களின் அபிபவ (அடக்க)த்தினுல் ஸத்துவகுணப் பிராதான்யமும், அதனுல் நிர்மலத்துவமும், அதனுல் ஆத்மஸ்வரூபத்தை யப

ரோக்ஷமாய் உணரும் ஸாமர்த்தியரூப பரிபாகமும் ஏற்பட்டு நெடுநாள் இடைவிடாத ஊக்கத்தோடு அப்பியாஸம் செய்வதும் ஏற்படும்.

நிர்மலத்துவம், பரிபாகம், அகண்டாகாரவிருத்திரூப அப்பியாஸம் ஆகிய மூன்றும் புத்தியைச்சார்ந்ததே தவிர ஞானத்தைச் சார்ந்ததன்றென அறிதல் அவசியம்.

लोके द्विजानामृषयः पठितश्रुतिसंमिता ।
मेधया च महाभ्यासाद्व्यापारशतसंकुला ॥ ११६ ॥
अप्यस्खलितवर्णा या पठिता श्रुतिरुत्तमा ।
समाहितस्य व्यापारेऽसमाहितस्य चान्यदा ॥ ११७ ॥
पूर्ववच्चाप्यस्खलिता पठिता मध्यमा श्रुतिः ।
या सदा ह्यनुसन्धानयोगादेव भवेत्तथा ॥ ११८ ॥
पठिता श्रुतिरत्यन्तास्खलिता त्वधमा हि सा ।
एवमेवात्मविज्ञानसिद्धिरुक्ता त्रिधर्षयः ॥ ११९ ॥
या महाव्यवहारेषु प्रतिसन्धानवर्जने ।
अन्यदा तद्वर्जने वा सर्वदा प्रतिसन्धितः ॥ १२० ॥
अन्यूनाधिकभावा स्यात्सोत्तमा मध्यमाधमा ।
अत्रोत्तमैव संसिद्धेः पराकाष्ठा निरूपिता ॥ १२१ ॥

(இ - ள்) ஓ ரிஷிகளே! உலகத்தில் திவிஜர்களால் செய்யப்பட்ட அத்தியயனம் ஸமமாகவிருந்தாலும், புத்திசாலியான மேதாவியானவன் தனது அப்பியாஸ பலத்தினால் அத்தியயனம் செய்யும்போது அநேக இதர வியாபாரங்களைச் செய்து கொண்டிருந்தாலும் வேதோச்சார

ணத்தில் வர்ணங்கள், ஸ்வரங்கள் கிஞ்சித்தும் பிசகாமல் அத்தியயனம் செய்வான். இது உத்தமமான படன மாகும்.

வியவகாரகாலத்தில் வியவகாரத்தில் ஏகாக்கிரதை யாய் இருந்து, பின், அத்தியயனம் செய்யத் துவக்குங்கால், வெளி வியாபாரங்களில் ஏகாக்கிரதை குறைந்து வர்ண ஸ்வரபேதமின்றிக் கிரமமாய் அத்தியயனம் செய்வது மத்திமமாகும்.

ஸதா அத்தியயனத்தில் ஏகாக்கிரதை யிருந்தால் மட்டுமே பிழையின்றி யோதுவதும், ஏகாக்கிரம் குறைந் தால் ஓதுவதில் தவறுகள் உண்டாவதும் அதம படன மாகும்.

ரிஷிகளே! ஞானஸித்தியும் இங்ஙனமேயாம். மனம் உலக வியவகாரங்களில் இருந்தாலும் ஆத்மஸ்வரூபத்தில் மறதியின்மை உத்தமஸித்தியென்றும், உலக வியாபார மற்ற காலத்தில் ஸ்வரூபாநுஸந்தானமில்லாமலே மறதி யின்மை மத்தியம ஸித்தியென்றும், அநாத்ம பிராபஞ் சிக பாஹ்ய வியாபாரங்கள் கிஞ்சித்துமில்லாதகாலத்தில் ஸதா ஆத்மஸ்வரூப அநுஸந்தானத்திலிருந்தாலும் சிற் சில நிமிஷங்களில் ஸ்வரூபஸ்திதியின் மறதியுண்டாவது அதமஸித்தியென்றும் கூறப்படும். இவற்றுள் உத்தம மான ஸித்தியே பராகாஷ்டையெனப்படும். இதுதான் ஸஹஜஸ்திதி.

(வி—ரை) ஞானஸித்தியின் தாரதம்மியத்தை நன்கு விளக்கும் பொருட்டு வேத பாராயண திருஷ்டாந்தம் கூறப்பட்டது. இதில் அப்பியாஸத்தின் தாரதம்மியத் தையே அடிப்படையாய்க் கொண்டு உத்தம, மத்திம, அதமபேதங்கள் கூறப்பட்டன. அங்ஙனமே தார்ஷ்டாந்தி

கத்திலும் உத்தம, மத்திமாதிபேதங்கள் அப்பியாஸத்தின் தாரதம்மியத்தினுலேயே ஏற்படுவதாய் இருக்கின்றது.

அதன் விளக்கம் கூறப்படுகின்றது :—

1. அநுஸந்தான மின்றியே, ஞானி தன் வாஸ்தவ ஸ்வரூபத்தை மறவாமல் லௌகிக வியவஹாரங்களைச் செய்துகொண்டிருப்பது பிரஸித்தம். இது உத்தமமான ஸ்திதியென்று கூறப்பட்டது.

2. லௌகிக வியவஹார மில்லாமலும், அநுஸந்தானமில்லாமலும் தன்ஸ்வரூபத்தை மறவாதிருத்தல் இரண்டாவது; இது மத்திமமான ஸ்திதியென்று கூறப்பட்டது.

3. பிராபஞ்சிக வியவஹாரங்களில்லாமல் ஸ்வரூபாநுஸந்தானத்தோடிருந்து ஸ்வஸ்திதியை மறவாமலிருத்தலும், சிற்சில சமயங்களில் அநுஸந்தானமிருந்தும் மறதி யேற்படுதலும் அதமஸ்திதியாகு மென்றுங் கூறப்பட்டுள்ளது கூர்ந்து அறியத்தக்கது.

இவற்றுள் மூன்றுவதான அதமஸ்திதியானது நிதித்தியாஸன ஸ்திதியென்றும், இரண்டாவதான மத்தியம ஸ்திதியானது ஸவிகல்ப ஸமாதி ஸ்திதியென்றும், முதலாவதானஉத்தம ஸ்திதியானது நிர்விகல்ப ஸமாதி ஸ்திதியென்றுங் கூறப்படும். இதையே ஸஹஜஸ்திதியென்றும், சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஸஹஜஸ்திதியே ஞானஸித்தியின் பராகாஷ்டையாகும். இந்த ஸ்திதியிலிருக்கும் ஞானி வரிஷ்டனென்று கூறப்படுவன்.

மத்தியமமென்று கூறப்பட்ட ஸ்திதியிலுள்ள (ஸவிகல்பஸமாதியை அப்பியஸிப்ப)வர்கள் முத்திறத்தனராவர். இவர்கள் ஆத்மஞானவித், ஆத்மஞானவரன், ஆத்ம

ஞானவரீயான் எனப்படுவார்கள். அதமஸித்தி ஸ்திதி நிதித்தியாஸமே யென்று கூறலாம். ஏனெனில் இந்த ஸ்திதியில், ஸ்வரூபத்தின் மறதி, சிற்சில சமயங்களில் ஏற்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. மறதியேற்படாமல் இருப்பதற்கு ஆத்மஸ்வரூப அநுஸந்தானம் ஸதா செய்து கொண்டிருப்பது அவசியம். இந்த ஸ்திதியிலுள்ளவனுக்கு அப்பியாஸியென்று பெயர்.

அஞ்ஞானியாகிய பாமரனுக்கும், ஞானப்பியாஸிக்கும் என்ன வித்தியாஸமெனின், அப்பியாஸி சிற்சில நிமிஷங்களில் தனது உண்மையான ஸ்வரூபத்தை மறந்தாலும் மறக்கலாம். ஆனால் பாமரனோ ஸதா அநாத்ம பிரபஞ்சவியவஹாரத்தில் மிகவும் ஜாகரூகனாய் இருந்து சிற் சில நிமிஷங்களில் இயற்கையாய் ஏற்படக்கூடிய க்ஷணிக ஸமாதிகளென்று கூறப்படும் வாஸ்தவஸ்வரூப ஸ்திதியில் ஸுப்தனாய் இருப்பன்.

**स्वप्नाद्यास्वप्यवस्थासु यदा स्यात्परमा स्थितिः ।**
**विचारक्षणतुल्यैव सिद्धिः सा परमोत्तमा ॥ १२२ ॥**

(இ—ள்) மேற்கூறப்பட்ட உத்தம ஸித்தியின் ஸ்திதியே ஈண்டு பிரகாராந்திரமாக நிரூபிக்கப் படுகின்றது.

ஸ்வரூப விமர்சனம் செய்து தெளிந்த நிலையில் இருப்பது போலவே, ஸ்வப்னம் முதலிய அவஸ்தைகளிலும் கூடத் தன் ஸ்வரூப நிலையை மறவாமலும் அதினின்று நழுவாமலும் உள்ள ஸ்திதி பரம உத்தம மானது.

(வி—ரை) **स्वप्नाद्यासु अवस्थास्वपि** = "ஸ்வப்னம் முதலிய அவஸ்தைகளிலுங்கூட" என்று இங்கே வேறுபடுத்திக் கூறுவதால், முன்னர் 120 சுலோகத்திற் கூறப்பட்

டது ஜாக்கிராவஸ்தையின் வியவகாரங்களெனக்கொள்ள வேண்டி யிருக்கின்றது. ஈண்டு ஸ்வப்னுதியென்று கூறப் பட்டதால் ஸுஷுப்தியையுங் கொள்ளல் வேண்டும். ஆகவே ஒருஜீவனுக்கு இயற்கையாய் அமைந்துள்ள ஜாக்கிரம், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்னும் மூன்றவஸ் தைகளிலும் எந்த ஒரு மஹானுக்குத் தனது உண்மை யான ஸ்வரூப ஞானமானது நழுவாமல் இருக்குமோ அதுவே பரமோத்தமமான ஞானஸித்தியாகும் என்று கூறப்பட்டது.

இங்ஙனம் ஸ்வஸ்வரூப ஆத்மஞானமானது ஸதா மறதியின்றி ஸ்புரிப்பது உத்தம ஸித்தியென்று கூறின், இத்தகைய ஸித்த ஞானிக்கு, ஸ்தூல வியவஹாராவஸ்தை யாகும் ஜாக்கிரமும், ஸூக்ஷ்மவியவஹாராவஸ்தையாகும் ஸ்வப்னமும், ஸ்தூல ஸூக்ஷ்ம வியவஹாரங்களின் அபா வமும் அஞ்ஞாத ஸுகாநுபவ அவஸ்தையாகும் ஸுஷுப் தியும் உள்ளனவாகக் கூறலாமோவெனின், ஜாக்கிராதி அவஸ்தைகள் ஞானஸித்தனுக்குக் கூறுதல் சாஸ்திர ஸம் மதமன்று. ஜாக்கிராதி அவஸ்தைகள் அஞ்ஞான தசை யில் தான் உள்ளனவென்று கூறலாம். மேற்கூறிய அவஸ் தைகள் அவற்றின் அபிமானிகளாகிய விச்வ, தைஜஸ, பிராக்ஞர்களால் அனுபவிக்கப்படுகின்றன. விச்வ தைஜ ஸாதியர்கட்கு ஜீவத்தன்மையுண்டு. ஏனெனின் அவர் களுக்குப் போக்த்ருத்வமுண்டு. ஸ்வஸ்வரூப ஆத்ம ஞான ஸித்தியினுல், தான் கர்த்தா போக்தாவென்னும் மயக்க வுணர்ச்சி நாசமாய்விட்டது. விடவே ஜீவத் துவமும் ஒழிந்து விட்டது. ஆகையினுல் ஞானஸித் தனுக்கு அவஸ்தாத்திரயங்கள் கிடையவே கிடையாது. இது சிதையாத ஸித்தாந்தமாகும்.

ஸ்வ ஸ்வரூப வாஸ்தவ ஆத்மஞானமின்மையால், இதர ஜீவர்களிடத்தில், அஞ்ஞானமும், அதனால் மறைப்பும், அதனால் தாம் கர்த்தாபோக்தா வென்னும் மயக்கவுணர்வும், கற்பிதபோக்கியங்களின் வேறு பாடுகளால் ஜாக்கிராதி அவஸ்தைகளும் கற்பிக்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் அதிஷ்டான ஸ்வாத்ம ஸ்வரூபத்தில் கற்பனை. அதிஷ்டான ஞானத்தினால் எல்லாக்கற்பனைகளும் நாசமாகின்றன. அதிஷ்டான ஆத்மஞான ஸ்பூர்த்தி ஸதா அகண்டமாயிருக்கும் போது ஜாக்கிராதி அவஸ்தைகள் ஏது? ஞானஸித்தனுடைய அனுபவத்தில் கிடையவே கிடையாது. ஆனால் இதரபாமரஜீவர்களுடைய திருஷ்டியில் ஞானஸித்தனிடத்தில் தோன்றுவதைக் கருதி யிங்ஙனங் கூறப்பட்டதென்று அறிதல் அவசியம்.

सर्वत्र व्यवहारेषु यत्नात्संस्कारबोधतः ।
यदा प्रवृत्तिः सिद्धेः सा पराकाष्ठा समीरिता ॥ १२३ ॥

(இ—ள்) (ஜாக்கிர, ஸ்வப்ன) வியவஹாரங்களில் பிரவர்த்திக்கும்போது பிராசீன ஸம்ஸ்கார போதத்தினாலும் தனது ஸ்வப்பிரயத்தனத்தினாலும் வியவகரிப்பதும் ஸித்தியின் பராகாஷ்டையென்று கூறப்படும்.

(வி—ரை) அஞ்ஞான ஜீவர்களுக்கு அசுத்தமனம் இருப்பதனால் காமாதி துர்வாஸனைகள் குடிகொண்டிருக்கின்றன. வைராக்கியாதி அப்பியாஸங்களால் துர்வாஸனைகளற்ற மனம் சுத்தமாகின்றது. மனத்தில் துர்வாஸனைகளின் நாசமே மனோநாசமென்று கூறப்படும். இந்த வாஸனாக்ஷய மனோநாசங்களென்னும் இவை தத்துவ

ஞானமின்றி திடப்படா. ஆகவே வாஸனக்ஷயம், மனோ நாசம், தத்துவஞானம் என்னும் இம்மூன்றையும் ஸம காலத்தில் அப்பியஸித்ததின் பயனன்றோ ஞானஸித்தி? ஞானஸித்தனாகிய ஆரூடஞானி பிரபஞ்சவியவகாரம் செய்யும்போது அதற்குத் தக்க எண்ணங்களைத் தானாக வருவித்துக்கொள்வான். இயற்கையாய் வியவகார எண்ணங்கள் அவன் மனத்தில் எழா. மனோநாசமும் வாஸனக்ஷயமும் ஏற்பட்டுள்ளபடியால்.

**अयत्नेनैव परमे स्थितिः संवेदनात्मनि ।**
**अव्याहता यदा सिद्धिस्तदा काष्ठां समागता ॥ १२४ ॥**

(இ—ள்) யாதொரு பிரயத்தனமுமின்றிப் பரமமான சிதாநந்தஸ்வரூபத்தில் நின்றும் நழுவாத நிலை யெதுவோ அதுவே ஸித்தியின் பராகாஷ்டை யெனப்படும்.

(வி—ரை) முன் சுலோகத்தில ஸித்த புருஷனுக்குப் பிரபஞ்ச வியவஹாரம் செய்ய நேர்ந்தகாலத்தில் அவ்வியவகாரத்திற்குத் தக்க எண்ணங்களைத் தத்ஸமயத்திற்கு வருவித்துக் கொள்ளுவன். நாடகத்தில் ஸ்திரீவேஷம் பூண்டு நடிப்பவனான ஒருபுருஷன் அவ்வேஷத்திற்குரிய ஹாவபாவ வியவகாரங்களைச் செய்யும்போது அவற்றிற்குத் தக்க எண்ணங்களைத் தன்மனத்தில் வருவித்துக்கொண்டு தானே நடிக்கவேண்டும்? தனது வுண்மையான புருஷ வியக்திக்குரிய எண்ணங்கள் அவன் மனத்தில் ஸ்வபாவமாயிருத்தலின், அவற்றிற்குப் பிரயத்தனம் வேண்டாமன்றோ? இங்ஙனமே, ஞானஸித்தன் பிரபஞ்ச வியவகாரங்களைச் செய்வது நடிப்பு. ஸ்வரூபஸ்திதி ஸ்வபாவம். ஸ்வபாவத்தில் யாதொரு பிரயத்தனமும் அவசியமில்லை.

व्यवहारपरो भावान् पश्यन्नपि न पश्यति ।
द्वैतं तदा हि सा सिद्धिः पूर्णतामभिसंगता ॥ १२५ ॥
जागरादौ व्यवहरन्नपि निद्रितवद्यदा ।
स्थितिस्तदा हि सा सिद्धिः पूर्णतामभिसंगता ॥ १२६ ॥

(இ—ள்) (ஞானஸித்தன்)வியவஹாரபரனுகவிருந்து பாவங்களை, அதாவது பிரபஞ்சத்தின் கற்பித துவைதத் தோற்றங்களைப் பார்த்தாலும் அவன் துவைதங்களைப் பார்ப்பதே யில்லை. இத்தகைய நிலை பரா காஷ்டையை அடைந்த ஸித்தியெனப்படும்.

ஜாக்கிரம், ஸ்வப்னம் இவைகளில் ஞானஸித்தன் வியவஹரித்தாலும் அவன் ஸுஷுப்தியில் உறங்குவது போலவே இருப்பவனுவன். இந்நிலை யெப்பொழுது அடையப்படுகிறதோ அப்பொழுதுதான் அந்த ஞான ஸித்தி பரிபூர்ணமானதாகக் கருதப்படும்.

(வி—ரை) இதற்குமுன் இரண்டு சுலோகங்களில் ஸித்தனது ஸ்வகத ஞானத்தின் பராகாஷ்டையைப் பற்றிக் கூறி இந்த இரண்டு சுலோகங்களில் பரகத ஞானஸித்தியின் பரா காஷ்டை கூறப்படுகின்றது. ஸ்வகத ஞான ஸித்தியின் ஸ்வரூபம் மனோநாசமும் வாஸனக்ஷயமுமே யாகும். பரகத ஞானஸித்தியில் தத்துவஞானப் பிரதான யமும், வாஸனக்ஷய மனோநாசங்கள் அதற்கு ஸஹகாரி களுமாகும் என்று அறிதல் அத்தியாவசியம்.

ஸ்வகதம் = தனக்குள்ளே தன்னுல் மாத்திரம் உணரப்பட்ட ஞானஸித்தி.

பரகதம் = பாஹ்யத்தில் பிறரால் ஸித்தனிடத்தில் அதிஸூக்ஷ்மமாய் உணரக்கூடிய ஞானஸித்தி.

एवं सिद्धिमनुप्राप्तः सिद्धेषूत्तम उच्यते ।
व्यवहारपरो नित्यं न समाधिं विमुञ्चति ॥ १२७ ॥
कदाचिदपि मेधावी स सिद्धेषूत्तमो मतः ।

(இ—ள்) இத்தகைய ஸித்தியை யடைந்தவனே ஸித்தர்களில் உத்தமனென்று கருதப்படுவன். ஸதா ஸர்வகாலமும் வியவகாரங்களில் ஈடுபடுபவனுய்க் காணப்படினும், அந்த ஸித்தன் ஸமாதி நிலையினின்றும் நழுவுவதேயில்லை. இத்தகைய ஞானியே ஸித்தர்களில் உத்தமனென்று மதிக்கத் தக்கவன்.

(வி—ரை) இது காறும் ஞானஸித்தியின் பராகாஷ்டை கூறப்பட்டது. இனி ஞானஸித்தர்களில் எவன் உத்தமன்? என்னுங்கேள்விக்கு விடை கூறப்படுகின்றது. இவ்விஷயமே ரிஷிகளால் வினவப்பட்டவற்றுள் முக்கியமானதாகும். ஆதலின், பல பிரகாரங்களால் நிரூபணம் செய்யப்படுகின்றது.

வியவகாரபரனுயிருந்தாலும் ஞானி, ஸமாதி ஸ்திதியிலிருந்து கிஞ்சித்தும் நழுவுவதில்லை.

சங்கை :— வியவகாரத்திலீடுபடுதல் ஞானஸமாதி நிலைக்கு விரோதமல்லவா? அல்லவெனின், வியவகாரபரர்களாயுள்ள அக்ஞானிகட்கும் ஸமாதி ஸித்தியில் உடன்படவேண்டும்.

சமாதானம் :—ஞானி பாஹ்ய வியவஹாரங்களைச் செய்தபோதிலும் அவனுக்கு அஞ்ஞானத்தின் ஆவரணம் (மறைப்பு) இன்மையால், சரீரத்தில் ஆத்ம புத்தியில்லை. அதனுல் வியவஹாரநிமித்தங்களான திரிசியங்களில் ஸத்தி

யத்துவப் பிராந்தி யில்லை. ஆகையால் அக்ஞனுடைய வியவஹாரத்திற்கும், ஞானியின் வியவஹாரத்திற்கும் ஸாம்மியங்கூறுதல் பொருந்தாது. ஞானிக்குப் பிராரப்த சேஷமாகிய காரியகரண ஸங்காதமான சரீரம் இருப்பது, சாஸ்திர ஸம்மதமானது. இது அக்ஞானத்தின் விக்ஷேப வடிவினது. கானல் (மருமரீசிகை) ஜலத்தில் ஸத்தியத் துவப் பிராந்தி அதிஷ்டான ஞானத்தினால் நிவர்த்தியாய் விட்டாலும், ஜலத்தோற்றம் மாத்திரம் உண்டு. உண்மை யில் ஜலம் இல்லவேயில்லை யென்னும் நிச்சய ஞானமுடை யவனுக்குத் தோற்றல் மாத்திரமாய் உள்ள ஜலத்தில் ஸத்யத்துவப் பிராந்தியில்லை. ஆதலின் ஞானியின் விய வஹாரம் ஆபாஸ மாத்திரமே யாகும்.

कुर्वन्नपि न कुर्वाणश्चाभोक्ता फलभोग्यपि ।
शरीरेऽप्यशरीर्येष परिच्छिन्नोऽपि सर्वगः ॥

இதரர்களின் பார்வைக்கு ஞானி, கர்மம் செய்வது போல் தோற்றினாலும் செய்யாதவனே ; போகங்களை யனு பவிப்பவன் போல் தோற்றினாலும் அவனிடத்தில் போக்த் ருத்வப் பிராந்தியில்லை. ஆதலால், போகங்களை யனுபவிக் காதவனேயாவன். சரீரமுடையவனாய்க் காணப்படினும் சரீரமில்லாதவனே. பரிச்சின்னனாய்த் தோற்றினும் அப ரிச்சின்னனேயாவன். என்னும் பிரமாணமும் जगज्जीवादि-रूपेण पश्यन्नपि परात्मवित् । न तत्पश्यति चिद्रूपं ब्रह्मवस्त्वेव पश्यति ॥ ஆத்மஞானியான ஜீவன்முக்தன் பின்ன பின்னமாய்க் காணப்படும் ஜகத்தையும் ஜீவர்களையும் பார்த்தாலும், தான் அபேத தரிசன ஆத்மஞானியாதலின், பார்க்காத வனே யாவன் ; மற்றோ, ஞானஸ்வரூபமான ஆத்மாபின்ன பிரஹ்மஸ்வரூபத்தையே பார்க்கின்றான். என்னும் பிர

மாணமும் ஈண்டு அறியத்தக்கன. இத்தகைய ஜீவன் முக்தஞான ஸித்தனே ஸித்தர்களில் உத்தமமானவன்.

ज्ञानिनां विविधानां च स्थितिं जानाति सर्वदा ॥१२८॥
स्वानुभूत्या स्वान्तरेव स सिद्धेषूत्तमो मतः ।
संशयो वापि कामो वा यस्य नास्त्येव लेशतः ॥१२९॥
निर्भयो व्यवहारेषु स सिद्धेषूत्तमो मतः ।

(இ—ள்) எந்த ஞானஸித்தன், தனது ஸ்வானுபவத்தில், பற்பலவிதமான ஞானிகளின் ஸ்திதியை ஸதா ஆத்மஸ்வரூபத்தில் காண்கின்றானோ அவனே உத்தமனாவன்.

ஸம்சயமாவது, ஆசையாவது எவனிடம் எள்ளளவும் இல்லையோ, எவன் வியவஹரிக்கும்போது நிர்ப்பயனாய் இருக்கிறானோ அவனே சிறந்த ஞானியாவன்.

(வி—ரை) உத்தம மத்திம வேறுபாட்டால் பற்பலவிதமான ஞானஸித்தர்களின் ஸ்திதியைத் தனது ஆத்மஸ்வரூபத்தில் அபரோக்ஷமாய்ப் பார்ப்பவன் உத்தம ஸித்தனென்று கூறப்பட்டது; யாதொரு வேறுபாடுமின்றி அபேதமாய் விளங்கும் ஆத்மஸ்வரூபத்தில் எங்ஙனம் பலவிதம் தோன்றும்? எனின், "பலவிதம்" கற்பனை ஆந்தரமான பிரத்தியக் சைதன்யத்தில் ஞானிகளின் உத்தம மத்திமாதி பேதங்கள் கற்பனையாய்த் தோற்றுகின்றன. ஞானிக்கு அஞ்ஞானமின்மையால், ஸந்தேஹம் இல்லை. துவைதத்தில் ஸத்தியத்துவப் பிராந்தியின்மையால் காமமும் இல்லை, பயமுமில்லை.

துவைதப் பிராந்தியினால் அநுகூலப் பிரதிகூல பாவங்களும், லாபநஷ்ட வுணர்ச்சிகளும் ஏற்படுகின்றன. ஆத

வின் காமக்குரோதங்கள் ஏற்படுகின்றன. ஆத்மஞான ஸித்தனுக்கு இவை யாவும் இல்லை.

सर्वं सुखं च दुःखं च व्यवहारं च जागतम् ॥ १३० ॥
स्वात्मन्येवाभिजानाति स सिद्धेषूत्तमो मतः ।
अत्यन्तं बद्धमात्मानं मुक्तं चापि प्रपश्यति ॥ १३१ ॥
यः स्वात्मनि तु सर्वात्मा स सिद्धेषूत्तमो मतः ।
यः पश्यन्बन्धजालानि सर्वदा स्वात्मनि स्फुटम् ॥ १३२ ॥
मोक्षं नापेक्षते क्वापि स सिद्धेषूत्तमो मतः ।

(இ—ள்) உலக வியவகாரங்களையும், அவற்றாலேற்படும் சுகதுக்கங்களையும் எவன் தன் (ஆத்ம) ஸ்வரூபத்தில் கற்பனையாய்த் தோற்றுவதாய் உணருகிறானோ அவனே உத்தம ஞானஸித்தன்.

எவன் அஞ்ஞானத்தால் பத்தப்பட்டபாமரர்களையும், பந்தத்தினின்றும் விடுபட்ட முக்தர்களையும் தன் (ஆத்ம) ஸ்வரூபத்திலேயே காண்கின்றானோ அவனே பரமஸித்தனுவன்.

எவன் பந்தக் கூட்டங்களைத் தனது ஆத்ம ஸ்வரூபத்தில் பார்த்தும், அப்பந்தஜாலங்களினின்றும் விடுபடுதலென்னும் மோக்ஷத்தை விரும்பாதிருக்கின்றானோ அவனே உத்தம ஸித்தனென்று கருதப்படுவான்.

(வி—ரை) ஞானி தனது ஆத்மஸ்வரூபத்தைக் கண்ணாடிபோலவும், உலக வியவகாரங்களையும், அவற்றாலேற்படும் சுகதுக்கங்களையும், பத்தர்(அக்ஞர்)களையும், முக்தர்களையும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிரதிபிம்பங்களைப்

போல் காண்கின்றான். கண்ணாடியிற் பிரதிபலிக்கும் பிரதி பிம்பங்களுக்கும் அக்கண்ணாடிக்கும் எங்ஙனம் ஒருவித் சம்பந்தமும் இல்லையோ அங்ஙனமே, ஞானியின் ஆத்ம ஸ்வரூபத்தில் அத்தியஸ்தமாய்த் தோற்றும் எல்லாக் கற்பனைகளுக்கும் ஞானிக்கும் யாதொரு ஸம்பந்தமும் இல்லையென்று அறியவும்.

सिद्धोत्तमोऽहमेवेह न भेदस्त्वावयोः क्वचित् ॥ १३३ ॥

(இ—ள்) இத்தகைய உத்தமஸித்தன் நானே. எனக்கும் உத்தமஸித்தனுக்கும் யாதொரு பேதமும் இல்லை.

(வி—ரை) "பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே" என்னும் பிரமாணத்தின்படி ஞானஸித்தன் பிரஹ்மாபின்ன சித்சக்தியாகும் பரதேவதையே யாவன்.

एतद्वो ऋषयः प्रोक्तं सुस्पष्टमनुयुक्तया ।
एतन्मयोक्तं विज्ञाय न क्वचित्परिमुह्यति ॥ १३४ ॥

(இ—ள்) ரிஷிகளே! நீங்கள் கேட்ட கேள்விகளுக்கு இங்ஙனம் மிகவும் தெளிவான விடைகள் கூறியிருக்கின்றேன். இவற்றை நன்றாய் உணர்ந்தவர்கள் எப்பொழுதும் மோஹமடைய மாட்டார்கள்.

इत्युक्त्वा सा परा विद्या विरराम भृगूद्वह ।
श्रुत्वैतदृषयः सर्वे संदेहमपहाय च ॥ १३५ ॥
नत्वा शिवादींल्लोकेशान् जग्मुः स्वं स्वं निवेशनम् ।

(இ---ள்) ஓ பரசுராமனே! இங்ஙனம் ரிஷிகணங்களின் வினாக்களுக்கு மறுமொழி கூறி, பரையான வித்யாதேவி மறைந்துவிட்டனள். ரிஷிகணங்களும் ஸந்தேஹங்களெல்லாம் நீங்கினவர்களாய் விளங்கினர். பிரஹ்மா, விஷ்ணு முதலிய திரிமூர்த்திகளை வணங்கி, ரிஷிகள் யாவரும் அவரவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சென்றனர்.

विद्यागीता मयैषा ते प्रोक्ता पापौघनाशिनी ।।136।।
श्रुत्वा विचारिता सम्यक् स्वात्मसाम्राज्यदायिनी।
विद्यागीतात्युत्तमेयं साक्षाद्विद्यानिरूपिता ।।137।।

(இ--ள்) உன் பொருட்டு என்னால் கூறப்பட்ட இந்த "வித்யா கீதை" யைச் சிரவணம் செய்தால் எல்லாப் பாபங்களும் ஒழியும். இதிலுள்ள விஷயங்களை நன்கு விமர்சித்து அடிக்கடி மனனம் செய்து தாரணை செய்தால் "ஆத்ம ஸாம்ராஜ்யம்" லபிக்கும்.

ஆயிரக் கணக்காயுள்ள கீதைகளிலெல்லாம் இந்த வித்யாகீதை உத்தமமானது; ஏனெனில் இது ஸாக்ஷாத் வித்யா (அறிவு) ஸ்வரூபிணியான பரதேவதையே திருவாய் மலர்ந்தருளினதல்லவா?

पठतां प्रत्यहं प्रीता ज्ञानं दिशति सा स्वयम्।
संसारतिमिराम्भोधौ मज्जतां तरणिर्भवेत् ।।137।।

(இ--ள்) இதனைத் தினந்தோறும் சிரத்தையோடு படித்தால் பரதேவதை பிரஸன்னமாகி ஆத்மஞானத்தை யருளச் செய்கின்றனள். இந்த வித்யாகீதை ஸம்ஸாரமாகும் அஞ்ஞானக் கடலில் மூழ்கித் தவிப்பவர்களுக்கு அக்கடலைத்தாண்டிக் கரைசேர்ப்பிக்கும் ஓர் ஓடம்போல்வதாகும்.

சிவம், சிவம், சிவம்

यथामति मया गीता विद्योक्ता विवृता क्रमात्।
श्रीविद्यापादकमले सम्यग्भूयात्समर्पिता ।।

क्वाहं मन्दमतिर्विद्यागीता क्व गहनाशया।
यत्नोयं स्वात्मशुद्धचर्था तत्संसर्गान्मया कृतः ।।

## எமது வெளியீடுகள்

## பெரிய எழுத்தில் பாராயணத்திற்குரியது தமிழில்

| | |
|---|---|
| ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்ரம் (பாராயணம்) | ரூ. 6.60 |
| ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்ரம் (பாராயணம்) (மிக பெரிய எழுத்து) | ரூ. 16.00 |
| ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாம ஸ்தோத்ரம், த்ரிசதி (பாராயணம்) | ரூ. 12.00 |
| ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமாவளி, த்ரிசதி, ஆச்சர்யாஷ்டோத்ரஸத, ஸுப்ரமண்ய நாமாவளி | ரூ. 16.00 |
| ஸ்ரீ வித்யா நவரத்ன மாலா (ஸ்ரீ வித்யா உபாஸகர்களுக்கு இன்றியமையாதது) | ரூ.60.00 |
| ஸ்ரீ தேவீ மஹாத்மியம் என்னும் ஸ்ரீ துர்கா ஸப்தசதீ | ரூ.70.00 |
| ஸ்ரீ வித்யா லகு பூஜை ஸ்ரீ தேவி ஸூக்தங்களும் உபநிஷத்களும் | ரூ. 45.00 |
| ஸ்ரீ மஹா கணபதி சதுராவ்ருத்தி தர்ப்பணம் | ரூ. 10.00 |
| ஸ்ரீ மஹா கணபதி சங்கட ஹரசதுர்த்தி பாராயணம் (12 மாதங்களுக்கும், அதிக மாசம், பூஜையுடன்) | ரூ.70.00 |
| ஸ்ரீ லக்ஷ்மி சஹஸ்ரநாம ஸ்தோத்ரம், த்ரிசதி, அஷ்டோத்ரஸத நாமாவளி | ரூ. 16.00 |
| ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமாவளி | ரூ. 16.00 |
| ஸ்ரீ லக்ஷ்மி சஹஸ்ரநாமாவளி | ரூ. 16.00 |
| ககாரகணபதி சஹஸ்ரநாமாவளி | ரூ. 13.00 |
| உச்சிஷ்ட ஸ்ரீ கணபதி சஹஸ்ரநாமாவளி, ஆவரணபூஜை | ரூ.13.00 |
| ஸ்துதி மஞ்சரி | ரூ.10.00 |
| ஸ்ரீ ஸுப்ரமண்ய தத்துவம் (சார் ந. சுப்ரமணி ஐயர்) | ரூ.66.00 |
| ஸ்ரீ லலிதா திரிசதி பாஷ்யம் (சார் ந. சுப்ரமணி ஐயர்) | ரூ.120.00 |
| ஸ்ரீ வித்யா குருதத்வம் (சார் ந. சுப்ரமணி ஐயர்) | ரூ. 27.00 |
| மனீஷா பஞ்சகம் (சார் ந. சுப்ரமணி ஐயர்) | ரூ. 95.00 |
| ஸ்துதிரத்னமாலா | ரூ. 16.00 |
| ஸ்ரீ ஸ்கந்த சஷ்டி கவசம் 6 படை வீடு | ரூ. 16.00 |
| நித்ய தேவதா த்யான ஸ்லோகங்கள் | ரூ. 16.00 |
| வாஞ்சா கல்பலதா | ரூ. 25.00 |
| அபிராமி அந்தாதி | ரூ. 10.00 |
| திருக்குறள் (மூலம்) | ரூ. 18.00 |
| Sri Devi Mahathmiyam (Sanskrit) | ரூ. 225.00 |
| Shakeshpeare and Astrology R. Ramaiyya | ரூ. 200.00 |

| | |
|---|---|
| வாழ்வு நலம் பெற R. Ramaiyya | ரூ. 30.00 |
| நனவாகிய கனவுகள் R. Ramaiyya | ரூ. 75.00 |
| திருமணப் பொருத்தம் I / II | ரூ. 40.00 & 40.00 |
| Pracheema Sampradhya Chandi Sapthasathi (Sanskrit) Parayanam | ரூ.80.00 |
| Sri Ganapathy Chathuravrithi Tharpanam (Sanskrit) | ரூ. 12.00 |
| Sri Vidhya Lagupooja (Sanskrit) | ரூ. 25.00 |
| Sri Vidhya Dhina Parayanam (Sanskrit) | ரூ. 60.00 |
| Sri Vidhya Nithyanu Sandhanam (Sanskrit) | ரூ. 40.00 |
| Samavedha Sandhya Vandhanam (Sanskrit) | ரூ. 10.00 |

## பிறர் வெளியீடுகள்

| | |
|---|---|
| ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாம பாஷ்யம் (ப்ரஹ்மஸ்ரீ கோடா வெங்கடேஸ்வர சாஸ்திரி) | ரூ. 750.00 |
| ஸ்ரீ சுப்ரமண்ய அஷ்டோத்ர சதநாமாவளி (ஸ்ரீ ஆத்மநந்தநாதர் இயற்றியது) (ப்ரஹ்மஸ்ரீ கோடா வெங்கடேஸ்வர சாஸ்திரி) | ரூ. 250.00 |
| ஸ்ரீ விக்னேஸ்ர மஞ்சரி - 4 பகுதிகள் (ப்ரஹ்மஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரி) | ரூ. 500.00 |
| மூக பஞ்சசதீ பாஷ்யம் (ப்ரஹ்மஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரி) | ரூ. 120.00 |
| சமஸ்கிருதம் - தமிழ் - ஆங்கிலம் அகராதி (ப்ரஹ்மஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரி) | ரூ. 400.00 |
| ஸௌந்தர்ய லஹரி பாஷ்யம் (கும்பகோணம் கணேச ஐயர் பதிப்பு) | ரூ. 75.00 |
| லலிதா சஹஸ்ரநாம பாஷ்யம் (கும்பகோணம் கணேச ஐயர் பதிப்பு) | ரூ. 250.00 |
| Sri Vidhya Saparya Padadhathi (Sanskrit) | ரூ. 70.00 |
| Sri Vidhya Saparya Padadhathi (Grantha Lipi) | ரூ. 120.00 |
| Sri Vidhya Rathnakaraha Karpathara Swamiji (Sanskrit) | ரூ. 400.00 |
| Sri Vidhyarnava Thanthram I & II ரூ. 1000.00 & 900 | ரூ. 1800.00 |

**Shree Gnanaprakashan**, "Nutech Supraja-A" Plot No. 377,
6th Sector, 30th Street, K.K. Nagar,
Chennai - 600 078. Phone : 044 - 2474 0001. Cell : 9445110199



